I-5

உ
சிவமயம்

# சைவ சமய வரலாறு



திருவாவடுதுறை ஆதீன
சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்
திருவிடைமருதூர்
1992 [ முதலாண்டு ]

I-(5)

உ
சிவமயம்

# சைவ சமய வரலாறு



திருவாவடுதுறை ஆதீன

சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்

திருவிடைமருதூர்

1992 [முதலாண்டு]

சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சிமைய வெளியீடு: 5

உ
சிவமயம்

# சைவ சமய வரலாறு



ஆசிரியர் :

'செந்நெறிச் செல்வர்', 'மெய்ஞ்ஞான வள்ளல்'

திரு. கு. வைத்தியநாதன்,

இயக்குநர்.



திருவாவடுதுறை ஆதீன

சைவசித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்

திருவிடைமருதூர்

1992 (முதலாண்டு)

உ

## மெய்கண்டசாத்திரம்

### (பதினான்கு)

உந்தி களிறு உயர்போதம் சித்தியார்
பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தஅருள்
பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு
உண்மைநெறி சங்கற்பம் உற்று.

பதிப்பகம் :
ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சகம், திருவாவடுதுறை.

உ

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையில் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்ப்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகித்
துயிலரும் பொழில்திருஆ வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

திருச்சிற்றம்பலம்

— அருள்திரு மாதவச் சிவஞான யோகிகள்



ஆதீனக் குருமுதல்வர்
அருள்திரு நமசிவாயமூர்த்திகள்



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்துமூன்றாவது குரு மகாசந்நிதானம்
*சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்*

உ
சிவமயம்

# முன்னுரை

“வரலாறு” என்னும் சொல்லுக்கு, ஏதாவது ஒரு துறையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளையும், அவற்றின் காரணங்களையும் விளைவுகளையும், கால அடிப்படையில், அறிவிக்கும் நூல் என்பது பொருள்.

வரலாறு பலவகைப்படும். நாட்டு வரலாறு, சமூக வரலாறு பொருளாதார வரலாறு, அரசியல் வரலாறு, மொழி வரலாறு, சமய வரலாறு எனப் பலவாக, வரலாறு பேசப்படுகிறது.

சமய வரலாறுகளிலும், ஒவ்வொரு சமயத்திற்கும், தனித்தனி வரலாறு உள்ளது. அந்தந்தச் சமயம் தோன்றிய காலம், அதனைத் தோற்றுவித்தவர்கள், வளர்த்தவர்கள், அதன் வளர்ச்சிக்கு உறுதுணையாக வாழ்ந்தவர்கள் முதலியவர்களின் காலம், தொண்டு முதலியனவும் வரலாற்றில் இடம்பெறுவது உலக வழக்கு.

சைவ சமய வரலாறு பற்றிப் பல அறிஞர்கள், முன்பு பல கோணங்களில், எழுதியுள்ளனர். “சைவ சமய வரலாறு” என்னும் இந்நூல், சைவ சித்தாந்தம் பயிலும் மாணவர்கள் அறிய வேண்டும் இன்றியமையாத செய்திகள் பலவற்றைக் காரண – காரிய இயைபு படுத்திக் கால ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் படைக்கப்பட்டுள்ளது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழ்ப் பேராசிரியராக இருந்த வித்துவான் க. வெள்ளைவாரணனார் அவர்கள் எழுதிய “பன்னிரு திருமுறை வரலாறு” என்னும் அரிய பெரிய ஆய்வு நூலில் உள்ள ஆய்வுக் குறிப்புகள்பல, இந்நூலின்கண் ஆதாரமாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

மதுரைப் பல்கலைக் கழகத்துச் சைவ சித்தாந்தத்துறைத் தலைவர் ஆக இருக்கும் டாக்டர் சித்தலிங்கய்யா அவர்கள் எழுதிய

" சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும் " என்னும் அரிய ஆய்வுநூற் கருத்துக்களும் இந்நூல் அமைவதற்குப் பேருதவியாக இருந்தன.

திருவாவடுதுறை ஆதீனம் நடத்தும் பயிற்சி மையம், இந்நூலை வெளியிடுவதால், திருவாவடுதுறை ஆதீன வரலாற்றுச் சுருக்கம் இந்நூலில் சிறப்பிடம் பெறுவது இன்றியமையாததாயிற்று.

இந்நூலை மேற்பார்வையிட்டுத் தேவையான திருத்தங்களைச் செய்து, இதனைச் செப்பனிட்டு உதவிய எளியேனின் " வித்தியாகுரு " ஆகிய மலேசியா சித்தாந்த வித்தகர். திரு. முரு. பழ, இரத்தினஞ் செட்டியார் அவர்களுக்கு எளியேனின் நன்றியுணர்வைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

" வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுத் தனைச் சிறிதும் நினையாதே, தளர்வு எய்திக் கிடப்பேனை, எனைப் பெரிதும் ஆட்கொண்டு, என் பிறப்பு அறுத்த இணை இலியை " என்னும் மணிவார்த்தைக்கு ஏற்ப, அடியேனின் " ஞானத் தந்தை " ஆகிய திருவாவடுதுறை ஆதீனத்தின் இருபத்து மூன்றுவது பட்டத்தில் எழுந்தருளிச் சிவஞானச் செங்கோல் ஓச்சிவரும் திருவுயர் குரு மகாசந்நிதானம், சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச் சந்நிதி அவர்கள் இச்சிறியேனை இச் சீரிய பணியில் முயக்குவித்து அருளிச் செய்துள்ள பேரருட் பேற்றினை நினைந்து அவர்கள் பொன்னார் திருவடிகளை மனம் மொழி மெய்களால் போற்றி வழிபடுகின்றேன்.

சீர்வளர்சீர் குரு மகாசந்நிதானம் அவர்களது அருளாசியுடன் மாணவர்கள் இந்நூலினை ஆழ்ந்து கற்றுப் பயனுறுமாறு வேண்டுகின்றேன்.

திருவிடைமருதூர்
21—5—1992

அடியேன்,
**கு. வைத்தியநாதன்.**



உ
*சிவமயம்*

# சைவ சமய வரலாறு

### தோற்றுவாய் :

'சைவம், என்பது, சிவம் என்னும் செந்தமிழ்ச் சொல்லின் அடியாகப் பிறந்தது. சிவனோடு தொடர்பு உடையது சைவம், 'சிவ' என்னும் சொல்லில் உள்ள சகர ஓசை வடமொழியில் இல்லை, அச்சொல் செம்மை என்பதன் அடியாகத் தோன்றியது. அது சிவப்பு, நன்மை, மங்கலம் என்னும் பொருள்களை உடையது.

'சமையம்' என்ற சொல், 'சமயம்' என்று மருவிற்று அச்சொல் 'நெறி' (SYSTEM) என்னும் பொருளைத் தருவது. எனவே 'சைவ சமயம்' என்பது, செம்மை + நெறி = 'செந்நெறி என்று பொருளைத் தருவதாகும்.

'சைவம்' பொது நோக்கு உடையது. எல்லா உயிர்களும் சிவ சம்பந்தம் உடையவையே ஆகும்.

*" நின்றனவும் சரிப்பனவும் சைவமேயாம்*
**—சம்பந்தர் புராணம் 926**

என்பது சேக்கிழார்வாக்கு. எனவே, உலகம் அனைத்தும் 'சிவமயம். ஆகும்.

அனைத்து உயிர்களையும் மாசு நீக்கிப் பக்குவப்படுத்திச் சிவமாம் தன்மை பெறச் செய்வதே சைவ சமயத்தின் நோக்கம் ஆகும்.

### சமயமும் மதமும் :

சமயம் வேறு; மதம் வேறு. மதம் என்னும் சொல், கொள்கை என்னும் பொருளில் வழங்கி வருகிறது. மணிமேகலைக் காப்பியத்தில் 'சமயம்' என்ற சொல் வருகிறது; 'மதம்' என்ற சொல்லாட்சி அக்காப்பியத்தில் இல்லை. தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் நூலில் மதம், சமயம் என்ற இரு சொற்களுமே இடம் பெறவில்லை.

"சமய வாதிகள் தத்தம் மதங்களில் அமைவதாக அரற்றி மலைந்தனர்" என்று போற்றித் திருவகவலில் (திருவாசகம்) இரு சொற்களுமே இடம் பெற்றுள்ளன. இதிலிருந்து 'மதம்' என்ற சொல், கொள்கையை மட்டும் குறிக்கும் போதச்சொல் என்பதும், 'சமயம்' என்ற சொல், சொள்கையை மட்டுமன்றி, அதற்கும் மேலான ஒரு நெறிப்பாட்டைக் காட்டும் சிறப்பை உடையது என்பதும் புலப்படும்.

எடுத்துக்காட்டாகச் 'சங்கரர் மதம்' என்ற ஒரு வழக்கு உள்ளது; ஆனால் சைவமதம், வைணவமதம் என்ற வழக்கு இல்லை. சைவசமயம், வைணவசமயம் என்றே வழங்கப்படுகிறது.

எனவே, சமயம் வேறு; மதம் வேறு என்பது பெறப்படுகின்றது.

## உயிர்களைக் காப்பதே சமயம்

உயிர்கள் படிப்படியாக முன்னேறும் இயல்பினை உடையன. இவ்வுண்மையைக் குழந்தைப் பருவம் முதல் முதுமைப் பருவம் வரை நிகழும் பல்வேறு உணர்வுகளையும் அறிவுத்தெளிவையும் வைத்து மெய்ப்படுத்தலாம். நாள்தோறும் உறங்கி எழுந்ததும், புத்துணர்வு பெறுகிறோம். இதிலிருந்து ஒவ்வொரு பிறப்பிலும் உயிர்கள் புதிய புதிய நுகர்வுகளையும், புதிய புதிய அறிவுத் தெளிவையும் பெறுகின்றன என்பது தெளிவாகிறது. இவ்வுண்மையைத் தெளிவுபடுத்தித் திருவள்ளுவர்,

> "உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு" (339)

என்று கூறியருளினார்.

எனவே மறுபிறப்பு உண்மையை ஒப்புக் கொள்ளும் சமயமே, உயிர்களைக் காத்து உயர்த்துகின்றன என்பது பெறப்படும்.

சைவசமயத்தின் நெறிப்பாடுகள், பகுத்தறிவு வாதிகளும் ஏற்கும் படியாக உள்ளன. எந்த மதவாதியும் மறுக்கமுடியாத கொள்கைத் தெளிவு உடையது சைவசமயம் ஒன்றே ஆகும். இவ்வுண்மையைத் தாயுமானவர், "சைவ சமயமே சமயம்" என்று போற்றிப் பேசுகின்றார்.



**சைவத்தின் தொன்மை :**

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தொன்மையை உடையது சைவம். கிறித்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே சிவவழிபாடு இருந்திருக்கிறது என்று புதைபொருள் ஆய்வறிஞர் சர் ஜான் மார்ஷல் குறிப்பிடுகின்றார். "சைவம்", வரலாற்றுக்கு முற்பட்ட சமயம்; அஃது, ஆரியர்கள் இந்தியாவிற்குள் வருவதற்கு முற்பட்ட காலத்திலிருந்தே வழக்கில் இருந்து வந்திருக்கிறது" என்று ஜி. யு. போப் பாதிரியார் கூறுகின்றார். இவர்களிருவரும் பிற மதத்தைச் சார்ந்தவர்கள் ஆகலின் இதுபற்றிய இவர்கள் கருத்து எவராலும் மறுக்கப்பட முடியாததாகும்.

உலகில் நிலவி வரும் பல்வேறு மதங்களும் குறிப்பிட்ட ஒரு காலத்தில் தோற்றுவிக்கப் பட்டதாக வரலாற்று நூல்கள் கூறுகின்றன. மிகப் பழமையானவை எனக் கூறப்படும் சில மதங்கள் எந்தக் காலத்தில் தோன்றின என்பதைக் கீழே காணலாம்:

| | | |
|---|---|---|
| யூத மதம் | — | கி. மு. 1500 – 1200 |
| ஷிண்டோ மதம் | — | கி. மு. 660 |
| சமணம் | — | கி. மு. 599 |
| பௌத்தம் | — | கி. மு. 560 |
| கான்பூஷியஸ் | — | கி. மு. 551 |
| கிறித்துவம் | — | கி. பி. 4 |
| இசுலாமியம் | — | கி. பி. 570 |
| சீக்கியம் | — | கி. பி. 1469. |

( இச் செய்திகளுக்கு ஆதாரம் 1977. ஜூன் திங்கள் திருக்கோயில் இதழில் உள்ளது )

சைவசமயம் எந்த ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது என்பதற்கு எந்த ஆதாரமும் இல்லை. இதிலிருந்து சைவசமயம், உலகில் உள்ள எல்லாச் சமயங்களுக்கும் முற்பட்ட தொன்மையினை உடையது என்பது இனிதே புலப்படும்.

**வேதகாலத்திற்கு முந்திய சைவம் :**

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வடமொழி வேதங்கள், கி. மு. 800 – க்கு முன்பு கி. மு. 1200 – க்குப் பின்பே

தோன்றியிருக்க வேண்டும் என்று " வரலாற்றுக்கு முந்திய பழைய இந்து இந்தியா " என்னும் நூலில் (பக்கம்-44) ஆர். டி. பானர்ஜி கூறுகிறார்.

கி. மு. 600 - க்கும் கி. மு, 1200 - க்கும் இடைப்பட்ட காலமே உபநிடதகாலமாகக் கருதலாம் என்று " உபநிடதத் தத்துவ வரலாறு " என்னும் நூலில் (பக்கம் - 13) ஆர். இ. ரானடே கூறுகிறார்.

இவ்வரலாற்று ஆய்வுகளிலிருந்து, வடமொழியில் உள்ள வேதங்கள் மற்றும் உபநிடதங்களின் காலம் இற்றைக்குச் சற்றேறக் குறைய மூவாயிரம் ஆண்டுகட்கு உட்பட்டதே என்று கருதும் படியாக உள்ளது.

இன்றுள்ள தமிழ்நூல்களில் பழமையானதாகக் கருதப்படும் தொல்காப்பியம், கி. மு. 400-ல் தோன்றியதாக இருக்கலாம் என்று "Tamil Studies" என்னும் நூலில் (பக்கம்-8) எம். சீனிவாச அய்யங்கார் கூறுகிறார். ஆக, வடமொழி வேதங்களுக்கு ஏறத்தாழ 500 ஆண்டுகளுக்குப் பின்னரே தொல்காப்பியம் தோன்றியிருக்க வேண்டும் என்பது புலனாகிறது.

தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல். எள்ளிலிருந்து எண்ணெய் தோன்றுவது போல, இலக்கியத்திலிருந்தே இலக்கணம் தோன்ற முடியும். தொல்காப்பியம் என்னும் பழந்தமிழ் இலக்கண நூற்கு ஆதாரமாகப் பல இலக்கியங்கள் கி. மு. 400-க்கு முன்பு இருந்திருக்க வேண்டும் என்பது இதனால் பெறப்படுகிறது. கி. மு. 400-க்கு முன்பே, தமிழில் இருந்த பல பழைய இலக்கியங்கள் அழிக்கப் பட்டிருக்க வேண்டும் அல்லது கடலரிப்புக்கு உட்பட்டு அழிந்திருக்க வேண்டும் என்று கருதுவதற்கு இடமிருக்கிறது. அப்பழைய இலக்கியங்கள் முதல் சங்கம், இடைச்சங்க காலத்தைச் சேர்ந்த நூல்கள் என்று அறிஞர்கள் கூறுகின்றார்கள்.

தொல்காப்பியத்தில் " கடவுள் " என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது. தொல்காப்பியம் பொருளதிகாரம் 81-ஆம் நூற்பாவில் வரும்

*" காமப்பகுதி கடவுளும் வரையார் "*

என்னும் செய்தி இதற்குப் பிரமாணமாக உள்ளது.



'கடவுள்' என்ற சொல், இறைவனின் இரு பேரியல்புகளைக் குறிப்பது. உயிர்களையும் உலகங்களையும் கடந்து நின்று அவற்றை இயக்குபவன் என்ற பொருளைக் 'கட' என்னும் பகுதியும், ஒவ்வொரு பொருளின் உள்ளிருந்து, அதுஅதுவாய் அவற்றுடன் கலந்து நின்று அவற்றின் இருப்புக்கும் அவை இயங்குவதற்கும் துணையாய் இருப்பவன் என்ற பொருளை 'உள்' என்னும் விகுதியும் குறிக்கின்றன. பொருள்களைக் கடந்து நிற்பது கடவுளின் சிறப்பியல்பு ; அவற்றுடன் கலந்து நிற்பது கடவுளது பொது இயல்பு.

இன்றும் பேச்சு வழக்கில் இருக்கும் 'கடவுள்' என்னும் சொல்லாட்சி, பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாகத் தமிழில் வழங்கி வந்திருக்கிறது என்பது இனிதே புலப்படும்.

திருமந்திரத்தில் 'கடவுள்' என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது. அத்திருமந்திரம் வருமாறு :

*" ஒழிந்தேன் பிறவி ; உறவு என்னும் பாசம்*
*கழிந்தேன் ; கடவுளும் நானும் ஒன்று ஆனேன் ;*
*அழிந்தாங்கு இனிவரும் மார்க்கமும் வேண்டேன் ;*
*செழுஞ்சார்பு உடைய சிவனைக் கண்டேனே "* (2958)

'திருமந்திரம்' அருளிய 'திருமூலர்' வாழ்ந்த காலம் கி. மு 6000-க்கும் கி. மு. 3100-க்கும் இடைப்பட்ட காலம் என்று 'பன்னிருதிருமுறை வரலாறு' என்னும் நூலின் இரண்டாம் பகுதி பக்கம் - 539-ல், பேராசிரியர் க. வெள்ளைவாரணார் அவர்கள் ( அண்ணாமலைப் பல்கலைக்கழகம் - 1980 ) குறிப்பிடுகிறார்கள்.

இதிலிருந்து, இற்றைக்கு 8000 ஆண்டுகட்கு முன்பிருந்தே 'கடவுள்' என்னும் சொல், தமிழர்கள் வழக்கில் இருந்திருக்கிறது என்பதும், அக்கடவுள் " சிவபெருமானே " என்பதும் இனிதே புலப்படுகிறது.

இவ்வாய்வுகளிலிருந்து வடமொழி வேதங்கள் தோன்றுவதற்குப் பல ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பே, 'சைவம்' மேலோங்கி விளங்கியிருந்திருக்கிறது என்பது தெளிவாகிறது.

## தமிழில் இருந்த 'நான்மறை' வேதங்கள் :

வடமொழியில் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்கள் இருப்பன போன்று, தமிழ் மொழியிலும் அறம், பொருள்

இன்பம், வீடு என்னும் நான்கு வேதங்கள் இருந்திருக்கின்றன. இவற்றை 'நான்மறை' என்று திருமுறைகள் முழக்குகின்றன.

'வடமொழி வேதங்கள் அநாதி ; யாராலும் தோற்றுவிக்கப் படவில்லை'

என்பது ஆரிய வழக்கு ; ஆனால், வடமொழி வேதங்களையும் தமிழ்மொழி வேதங்களையும் சிவபெருமானே அருளினான் என்பது தமிழ் வழக்கு.

இவ்வுண்மையை,

"ஆரியன் கண்டாய் ; தமிழன் கண்டாய்" (6-23-5)

என்னும் அப்பர்வாக்கு மெய்ப்படுத்துகின்றது,

தமிழ்மொழியில் இருந்த நான்மறைகளைச் சிவபெருமானே அருளினான் என்னும் உண்மையைத் திருமுறைகளில் பல இடங்களில் காணலாம்.

அவற்றுள் சில வருமாறு :

"அறம், பொருள், இன்பம், வீடு மொழிந்த வாயான்
முக்கண் ஆதி" (1-53-6) — சம்பந்தர்.

"ஆல்அதன் கீழிருந்து நால்வர்க்கு அறம், பொருள்,
வீடு, இன்பம், ஆறு அங்கம், வேதம்
தெரித்தானை" (6-66-2) - அப்பர்.

"அன்று ஆலின் நிழற்கீழ் அறம் நால்வர்க்கு
அருள்புரிந்து" (7-28-3) - சுந்தரர்.

"அரும் தவர்க்கு ஆலின்கீழ் அறம் முதலாம்
நான்கினையும் இருந்து, அவர்க்கு அருளும்"
(8-12-20) மணிவாசகர்.

திருக்குறளும் இந்நான்மறைகளையே பேசுகின்றது; எனவே, திருக்குறளுக்குத் "தமிழ்மறை" என்று பெயர் வழங்குகின்றது. திருமந்திரத்திலும் "வேதத்தைவிட்ட அறம் இல்லை" (51) என்றுள்ளது.



திருக்குறள், தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய சைவ சமய இலக்கியங்கள், தமிழில் இருந்த வேதங்கள் ஆகிய நான்மறைகளில் கூறப்பட்டிருந்த கருத்துக்களையே பேசுகின்றன. இவ்வுண்மையை நல்வழியில்,

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர்"

என்று ஔவையார் அருளிச் செய்துள்ளார்.

திருமுறை ஆசிரியர்கள் காலத்தில், சைவசமயத்திற்குப் பெருந் தீங்கு நேரிட்டிருந்தது. சமணர்கள் வடமொழி வேதங்களையும் தமிழ் மொழி வேதங்களையும் பெரிதும் பழித்தனர்; அதனால் இறை உணர்வு பாதிக்கப்பட்டது. எனவே, இருமொழி வேதங்களையும் காத்தற் பொருட்டு இறைவன், வடமொழி வேதங்களையும், தமிழ்மொழி வேதங்களையும் திருமுறைகளில் இடம்பெறச் செய்தான். அவற்றுள் சில வருமாறு:

"சாமவேதம்" ஓர் கீதம் ஓதி, அத்தசமுகன் பரவும்
நாமதேயம் அது உடையார்" (2-92-8) – சம்பந்தர்.

"எண் உடை இருக்கும் ஆகி, இருக்கின்
உட்பொருளும் ஆகி" – (4-48-3) – அப்பர்.

"திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக் காப்புச் சாத்தி
இருக்குமொழிப் பிள்ளையார் எதிர்தொழுது நின்றருள"
– சம்பந்தர் புராணம் – 80 – சேக்கிழார்.

'இருக்குமொழிப் பிள்ளையார்' என்று சேக்கிழார் குறிப்பிடுவதால், சம்பந்தபெருமான் இருக் வேத அந்தணர் குலத்தைச் சேர்ந்தவர் என்பது பெறப்படுகின்றது.

இந்த சான்றுகளைக் காணும் போது, திருமுறை ஆசிரியர்கள், வடமொழி வேதங்களையும் தமிழ்மொழி வேதங்களையும் இணைத்துப் போற்றியே வந்திருக்கின்றனர் என்பது இனிதே புலப்படும்.

இவ்விரு மொழி வேதங்களுள், தமிழ்மொழி வேதங்கள் ஆகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்மறைகளே, முதற்கண் தோன்றியிருக்கின்றன என்பதை,

" ஒரு நான்மறை ஆறங்கம் முன் மொழியானை " ( 2-16-6 )

என்னும் சம்பந்தர் திருவாக்கு மெய்ப்படுத்துகின்றது.

தமிழ் நான்மறைகளின் சாரம் ஆகிய திருக்குறட்பாக்களைப் பல இடங்களில் சிவஞானபாடியத்துள் மேற்கோள் காட்டும் சிவஞானசுவாமிகள், ஆரிய வேதங்களிலிருந்து ஒன்றைக் கூட காட்டவில்லை என்பதும் இங்கு நினைவு கூர்தற்பாலதே ஆகும்.

**சங்க காலத்துச் சைவம் :**

வரலாற்று ஆசிரியர்கள் சங்க காலத்தை மூன்று வகையாகப் பிரித்துள்ளனர். அவை வருமாறு :

முதற் சங்க காலம் – கி. மு. 2500-க்கு முற்பட்டது.

இடைச் சங்க காலம் - கி. மு. 1880-க்கு முற்பட்டது.

கடைச் சங்கம் – கி. மு 300 முதல் கி. பி. 100 வரையுள்ளது.

தொல்காப்பியர் கி. மு. 400 – ல்இடைச்சங்க காலத்தின் பிற்பகுதியில் வாழ்ந்தவர் என்பது வரலாற்று அறிஞர்கள் கருத்து.

திருக்குறள், கி. மு. 31-ல் கடைச் சங்க காலத்தில் தோன்றிய நூல் என்று வரலாற்றுப் பேராசிரியர்கள் முடிவு செய்துள்ளனர்.

இப்பாடத்திட்டத்தில் " திருக்குறளில் சைவசித்தாந்தம் " என்று தனியொரு நூல் வெளியிடப்பட்டிருக்கிறது. எனவே, திருக்குறளைத் தவிர்த்துப் பிற சங்க நூல்களில், சைவ சமயக் கருத்துக்கள் எவ்வாறு இடம் பெற்றுள்ளன என்பது குறித்து இங்குச் சில சிந்திக்கப்படுகின்றன.

சங்க நூல்களில் சிவனைப் பற்றிய குறிப்புக்கள் விரிவாக வந்துள்ளன. அவற்றுள் சில வருமாறு :

" தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோற்கே " — புறநானூறு

" ஈர்ஞ்சடை அந்தணன் " — கலித்தொகை — 38

" முக்கண்ணன் " — கலித்தொகை — 2



" கறைமிடற்று அண்ணல் " — புறம் — 55

" மணிமிடற்று அண்ணல் " — பரிபாடல் — 8

" முது முதல்வன் " — புறம் — 166

" நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் " — ஐங்குறுநூறு — கடவுள் வாழ்த்து

" ஆலமர் செல்வன் " — கலித்தொகை — 81

" ஆலமர் கடவுள் " — புறம் — 198; அகம் — 181

சிவபெருமான் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களைச் செய்கிறான் என்னும் சைவ சித்தாந்தக் கருத்தைக் குறிப்பால் உணர்த்தும் சங்கநூற் பகுதிகள் வருமாறு :

" எல்லா உயிர்க்கும் ஏமம் ஆகிய" — புறம் — கடவுள் வாழ்த்து

" கொடுகொட்டி ஆடும் கால் " — கலித்தொகை - கடவுள் வாழ்த்து

நான்கு மறைகளையும் ஆறு அங்கங்களையும் உடைய வேதங்கள் சிவபெருமானின் வாயிலிருந்து தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்றன என்னும் செய்தியை,

" முது முதல்வன் வாய் போகாது ஒன்று புரிந்த
ஈரிரண்டின் ஆறு உணர்ந்த ஒரு முது நூல் "

என்று புறநானூறு 166-ஆம் பாடல் குறிப்பிடுகின்றது.

சிவபெருமான் என்றும் வினையினால் கட்டுப்படாதவன் என்னும் எண்குணங்களுள் ஒன்றாகிய ' இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவன் ' என்பதை,

*" வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்
கண்டது முதல் நூல் ஆகும் "*

என்று தொல்காப்பியம் ( பொருள் - 640 ) பேசுகின்றது.

' சிவம் ' என்ற சொல்லாட்சி, சங்க நூல்களில் இடம் பெறவில்லை ஆயினும் சிவபெருமானின் இயல்புகளையும் தொழில்களையும் குறிக்கும் சொற்கள் பல சங்கநூல்களில் உள்ளன என்பது மேற்கண்ட ஆதாரங்களிலிருந்து புலனாகும்.

'கடவுள்' என்ற சொல்லாட்சி, திருக்குறளில் இடம் பெறவில்லை; ஆயினும், சிவபெருமானின் இயல்புகளைக் குறிக்கும் சொற்கள் முதலதிகாரத்தில் உள்ளன. ஒன்பதாவது குறளில் வரும் "எண்குணத்தான்" என்ற சொல் சிவபெருமானையே குறிக்கும். இவ்வுண்மையைப் பரிமேலழகர்,

> "எண்குணங்களாவன - தன் வயத்தனாதல், தூய
> உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல். முற்றும்
> உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்,
> பேரருள் உடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப
> முடைமை
> என இவை; இவ்வாறு சைவ ஆகமத்தில் கூறப்பட்டது",

என்று தெளிவுபடுத்தியுள்ளார். வைணவ சமயத்தைச் சார்ந்த பரிமேலழகர், சாய்தல் உவத்தல் இன்றி இவ்வுண்மையைக் கூறிய தற்காகச் சைவ உலகம் அவர்க்குப் பெரிதும் நன்றிக் கடப்பாடு உடையதாகும்.

திருக்குறளில் 'கடவுள்' என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை என்றாலும், திருவள்ளுவர் கூறும் இறை இலக்கணத்தைக் கொண்டு, திருக்குறள் சிவ பெருமானைக் குறித்தே பேசுகின்றது என்பது தெளிவு.

அவ்வாறே, சங்க இலக்கியங்களில் 'சிவம்' என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை என்றாலும், அவற்றில் கூறப்படும் இறை இலக்கணத்தைக் கொண்டு, சங்க இலக்கியங்கள் சிவ பெருமானைக் குறித்தே பேசுகின்றன என்பதும் இனிதே புலப்படும்.

'சிவ' என்ற சொல்லில் உள்ள,

'சி' என்ற எழுத்து, இறைவனின் கடந்து நிற்கும் இயல்பையும்,
'வ' என்ற எழுத்து, இறைவனின் கலந்து நிற்கும் இயல்பையும்,
குறிப்பதால், 'கடவுள்' என்ற சொல்லுக்குச் 'சிவம்' என்பதே பொருளாகும்.

'கடவுள்' என்ற சொல்லாட்சி, சங்க நூல்களில் இடம் பெறுவதால், சங்க நூல்கள் சிவபெருமானையே குறிக்கின்றன என்பது போதரும்.

எனவே, சங்க காலத்தில் சிவ வழிபாடு சிறந்து இருந்திருக்கிறது என்பது இனிதே பெறப்படும்.



**சங்கம் மருவிய காலத்துச் சைவம் :**

சங்க காலத்தை அடுத்துச் சங்க நூல்களை ஒத்த நூல்கள் எழுந்த காலம், சங்கம் மருவிய காலம் எனப்படும். கி. பி. 100 முதல் கி. பி 600 வரை உள்ள ஐந்நூறு ஆண்டுக்கால வரலாற்றினை உடையது சங்கம் மருவிய காலம்.

இக்காலத்தில்தான், தமிழ் நாட்டில் பிறமொழியினரான 'களப்பிரர்' புகுந்தனர்; பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரையில் இருந்த கடைச்சங்கம் அழிவுற்றது; பலசிறப்பட்ட தமிழ் இலக்கியங்கள், கலைச் செல்வங்கள் அடங்கிய ஏடுகள் பாழடைந்தன. சைவசமயப் படைப்புகள் அழிக்கப்பட்டன. சைவநெறி தடம் புரண்டது. சமண, பௌத்த நெறிகள் தமிழ் மக்களிடையே புகுத்தப்பட்டன. முழுமுதற் பொருளாகிய சிவ வழிபாட்டை விடுத்துப் பல தெய்வ வழிபாடுகளையும், சிறு தெய்வ வணக்கங்களையும் தமிழ் மக்கள் பயிலத் தொடங்கினர். எனவே, இக்காலத்தை 'இருண்டகாலம்' என வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகிறார்கள்.

தமிழரின் சமய நெறியாகிய சைவம் நிலைகுலைந்தது. ஆயினும், தமிழ் மொழிக்கு ஆக்கம் தேடும் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரு பெருங்காப்பியங்கள் இக்காலத்தில்தான் தோன்றின. பதினெண்கீழ்க்கணக்கு எனப்படும் அறநூல்கள் இக்காலத்திலேயே தொகுக்கப்பட்டன. சங்க காலத்தில் தோன்றிய "திருக்குறள்" என்னும் தமிழ்மறை பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாக வைத்து எண்ணப்படுகிறது. சமண முனிவர்கள் பலர் எழுதிய வெண்பாவடிவில் உள்ள பாக்கள் பல தொகுக்கப்பட்டு 'நாலடியார்' என்னும் நூல் வடிவைப் பெற்றது.

இளங்கோவடிகள் செய்த 'சிலப்பதிகாரம்' என்னும் காப்பியம் தமிழ் நாட்டில் சமணமதக் கொள்கையைப் பரப்பியது. கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் செய்த 'மணிமேகலை' என்னும் காப்பியம் தமிழகத்தில் பௌத்தமதக் கொள்கைகளைத் தூவியது. இவ்வாறு, சைவநெறிக்குப் புறம்பான கொள்கைகளை இவ்விரட்டை நூல்கள் தமிழர்களிடையே விதைத்தன. ஆயினும், தமிழர்களின் வாழ்க்கை முறை, சமூக அமைப்பு தமிழர்கள் கடைப்பிடித்து வந்த சமயக் கருத்துக்கள் முதலானவற்றை, இந்நூல்கள் மறைக்காமல் வெளியிட்டன. சங்க காலத்தில் தமிழ்நாட்டில் சிவன் கோயில்கள் இருந்தசெய்தியையும், சிவபெருமானுக்கும் முருகப் பெருமானுக்கும் வழிபாடுகள் நிகழ்ந்த செய்தியையும்

"பிறவாயாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்" (5-169)

என்று சிலப்பதிகாரம், பறை சாற்றுகின்றது.

சைவநெறியில் 'சிவாயநம' என்னும் அஞ்செழுத்து மந்திரமும், 'ஓம் சரவணபவ நம' என்னும் எட்டெழுத்து மந்திரமும் கடைப் பிடிக்கப்பட்டன என்ற செய்தியை,

"அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்" (11-128)

என்று சிலம்பு தெளிவுபடுத்துகின்றது.

சங்க காலத்தில் சிவ வழிபாடு எத்தனை மேலோங்கி இருந்தது என்பதை,

"கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியில்
வெள்ளியம்பலத்து" (40 - 41)

"ஆலமர் செல்வன் பெயர் கொண்டு வளர்ந்தோய்"
(23 - 91)

என்று சிலப்பதிகாரம் புலப்படுத்துகின்றது.

சிலப்பதிகாரத்தை அடுத்து எழுந்த மணிமேகலையும், சங்க காலத்தில் சிவவழிபாடு சிறந்தோங்கி இருந்தது என்ற செய்தியை,

"நுதல்விழி நாட்டத்து இறையோன்" (1 - 54)

என்று குறிப்பிடுகின்றது.

கி. பி. 300 முதல் கி. பி. 600 வரையுள்ள முன்னூறு ஆண்டுக் காலத்தில், தமிழ் நாட்டில் சமணம் அரசாங்கச் சமயமாக வேரூன்றியது. அதன் பயனாகத் தமிழகத்தில் சங்க காலம் வரை செழித்தோங்கியிருந்த சைவநெறி சிறுகச் சிறுகத் தேய்ந்து ஓய்ந்து போகும் நிலை ஏற்பட்டது.

சமணர்களின் துறவுக்கோலம் அரசர்களைப் பெரிதும் கவர்ந்தது. எனவே, அரசனுக்கு ஆணையிடும் அளவுக்குச் சமணம் தமிழகத்தில் வளர்ந்தது.



சைவ மரபுப்படி, வழிபாட்டு முறையில் பழகி வந்த சாதாரண மக்களுக்குச் ( The Rank and tile ) சமணத் துறவிகளிடம் பற்று ஏற்படவில்லை.

அரசனும் ஆட்சியில் இருந்தவர்களும், சமணர் சொற்கேட்டு நடந்து வந்ததால், சிவன் கோயில்களில் வழிபாடுகள் முடங்கின; கோயில்கள் இருளில் மூழ்கின.

அத்தகைய சூழ்நிலைகளில் தாம், சாதாரண மக்கள், சில சிறு தெய்வங்களைத் தோற்றுவித்துத், தங்களுக்குத் தோன்றிய முறையில் வழிபாடுகளை நடத்தி வந்தனர்.

சைவம் தடம் புரண்டது.

**சைவத்தின் மறுமலர்ச்சிக் காலம் :**

கி. பி. 600 முதல் கி. பி. 1200 வரையுள்ள காலம், "சைவ சமயத்தின் பொற்காலம்" எனப் போற்றப்படுகிறது. இந்தக் காலப் பகுதியில் கி. பி. 600 முதல் கி. பி. 800 வரை பல்லவர்களும், கி. பி, 801 முதல் கி. பி. 1200 வரைச் சோழர்களும் தமிழ்நாட்டின் பெரும்பகுதியை ஆண்டு வந்தனர்.

சமணர்கள், துறவு நெறியை வலுக்கட்டாயமாகத் திணித்ததை, மக்கள் விரும்பவில்லை. இறைப்பற்று இல்லாத வெற்று வாழ்க்கை அவர்களுக்கு வெறுப்பை ஏற்படுத்தியது. அரசியல் சூழ்நிலை காரணமாகக் களப்பிரர்களின் ஆட்சி முடியும் தருவாயில் இருந்தது.

அத்தகு சூழ்நிலையில்தான், "சைவப் புண்ணியக் கண்கள்" என்று சேக்கிழாரால் போற்றப்படும் திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் தமிழ்நாட்டில் அவதரித்தனர். துறவற நெறிக்குள்ள சிறப்பு, இல்லற நெறிக்கும் உண்டு என்னும் சிவநெறிக் கொள்கையை இவ்விரு பெருமக்களும், மக்களுக்குப் போதித்தார்கள். ஆலமர் செல்வனாகத் துறவுக் கோலத்தில் இருக்கும் சிவபெருமான்

"மறைக்காட்டுறையும் மணாளன் (6-23 4) ஆகவும்,

"பெண்ணின் நல்லாளொடு பெருந்தகை" (3-24-1)

ஆகவும் இருப்பதாகப் பாடிப் பரவினர்.

சிவபெருமான் அம்மையப்பராக, மாதொருபாகனாக இருக் கிறான் என்பதைப் பல பாடல்களில் பாடித் தெளிவுறுத்தினார்கள்.

சமய நெறிகளில் குழம்பிப் போயிருந்த தமிழ் மக்களுக்கு, இப்பெருமக்களின் அருளுரைகள் தெம்பையும் தெளிவையும் தந்தன. எனவே, இவர்களுக்குப் பெரும் வரவேற்பு இருந்தது. அவர்கள் சென்ற ஊர்களில் எல்லாம், மக்கள் கூட்டங்கூட்டமாகச் சென்று அவர்களைப் பின் தொடர்ந்தனர்.

கோயில்களில் வழிபாடுகள் முட்டாது நடைபெற்றன. இசைக்கலையும் நடனக்கலையும் ஏற்றம் பெற்றன. சைவசமயம் புத்துயிர் பெற்றுப் புதுப் பொலிவுடன் விளங்கியது. சைவம் மறுமலர்ச்சி பெற்றது.

## 1 திருநாவுக்கரசரின் சமய வாழ்வு :

சைவசமய ஆசிரியப்பெருமக்களுள், திருநாவுக்கரசர் கி. பி. 575–ஆம் ஆண்டில் திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூர் என்னும் தலத்தில் சைவ வேளாண் மரபில் அவதரித்தார். அவர் காலத்தில் 'மகேந்திரவர்மன்' என்னும் பல்லவ மன்னன், காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு, தொண்டை நாட்டை ஆண்டுவந்தான். அவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் மருள்நீக்கியார் என்பதாகும்.

திருநாவுக்கரசர் ஆகிய மருள் நீக்கியார் இளமையிலேயே பெற்றோர்களை இழந்துவிட்டார். அவருடைய ஒரே தமக்கையார் திலகவதியார். அவருக்குப் பேசி முடித்த கணவர் போரில் இறந்ததால், திருமணம் நிகழும் முன்பு அவரும் இளமையிலேயே கைம்பெண் கோலம்பூண்டார். இந்நிலைமைகளால் வாழ்க்கையில் வெறுப்புற்ற மருள் நீக்கியார் சமண மதத்தில் சேர்ந்தார். சமண நூல்கள் அனைத்தையும் கற்றுச் சமணத் துறவியானார். பல ஆண்டுகள் துறவு ஒழுக்கம் குன்றாத பெருமைக்குரியவராக வாழ்ந்ததால், சமணத்துறவிகளுக்குத் தலைவர் ஆனார். அப்போது அவருக்குத் 'தருமசேனர்' என்று பட்டம் சூட்டினார்கள்.

இளமையிலேயே தவக்கோலம் பூண்ட மருள்நீக்கியாரின் தமக்கையார் தம் தம்பியாரைச் சைவசமயத்திற்கு மீண்டும் கொணர்ந்து அருளுமாறு, சிவபெருமானை நோக்கிப் பலகாலம் விண்ணப்பம் செய்தார். அதன் பயனாக மருள் நீக்கியாருக்குக் கடும் சூலை நோயைக் கொடுத்து இறைவன் அவரைத் திலகவதியாரிடம் சேர்ப்பித்தான். ( விரிவான வரலாற்றைப் பன்னிரு திருமுறை வரலாற்றில் காணலாம் )



சமண சமயத் தொடர்பு ஒழித்துச் சைவ சமயத்தை மேற்கொண்ட போது அவருக்கு அறுபது வயதிற்கு மேற்பட்டிருக்கலாம் என்று 'தமிழ் வரலாறு' எழுதிய தஞ்சை சீநிவாசப்பிள்ளை அவர்கள் கருதுகிறார்கள்.

சைவம் சார்ந்தபோது இறைவன் அவருக்குத் 'திருநாவுக்கரசு' என்ற பெரும்பெயரைச் சூட்டியருளினான். அதன்பின்னர், ஊர் ஊராகச் சென்று கோயில்களில் உழவாரத் திருப்பணி செய்யும் பெருந்தொண்டை மேற்கொண்டார். திருவதிகை வீரட்டானத்தில், திருநாவுக்கரசு என்னும் திருநாமம் பெற்ற அப்பெருமகனார், திருவெண்ணெய்நல்லூர், திருவாமாத்தூர், திருக்கோவலூர் திருப்பெண்ணாகடம் முதலிய திருத்தலங்களுக்குச் சென்றார். திருப்பெண்ணாகடத்தில் உள்ள திருத்தூங்கானைமாடத் திருக்கோயில் இறைவனை வேண்டிச், சமண சமயத்தில் இருந்தபோது வளர்ந்த இவ்வுடம்பைத் தூய்மைப்படுத்தும் பொருட்டுத் தம் உடம்பில் சூலக்குறியும் இடபக்குறியும் பொறித்தருளப் பெற்றார். பின்னர், திருநெல்வாயில் அரத்துறை, திருமுதுகுன்றம் முதலிய பல தலங்களில் உழவாரப் பணி செய்து திருத்தில்லையை அடைந்தார். பல நாட்கள் தங்கியிருந்து அருகில் இருக்கும் திருவேட்களம் முதலிய சென்று திருத்தொண்டு செய்து வந்தார்.

திருநாவுக்கரசர் திருத்தில்லையில் இருந்த போது, சீர்காழியில் அவதரித்து, சிவபெருமானின் திருவருளால் ஞானப்பால் ஊட்டப் பெற்றதால் 'திருஞானசம்பந்தர்' என்ற திருப்பெயர் பெற்றுச் சிவபெருமான் புகழைப் பரப்பிவரும் ஆளுடைப் பிள்ளையாரைப் பற்றிக் கேள்விப்பட்டார் 'ஆளுடையரசு' ஆகிய திருநாவுக்கரசர். அப்போது அவருக்கு வயது எழுபது ஆகிவிட்டிருந்தது.

திருஞானசம்பந்தர் கி பி. 638–ஆம் ஆண்டில் அவதரித்தவர் என்று 'பன்னிரு திருமுறை வரலாறு' என்னும் நூலின் பக்கம் (373)–ல் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். அவருக்கு, உபநயனம் செய்விக்கப் பட்டபோது ஏழு வயது ஆகியிருந்தது. திருநாவுக்கரசர் அவதரித்த ஆண்டு, கி. பி 575 என்று, மேற்படி நூலின் பக்கம் (368) – ல் அவர்கள் குறிப்பிடுகிறார்கள். இவ்வரலாற்று உண்மைகளைக் கணக்கிட்டு நோக்கும் போது, திருஞானசம்பந்தரைவிடத் திருநாவுக்கரசர் 63 – வயது (638 - 575 = 63) மூத்தவர் என்பது பெறப்படுகிறது. ஆக, நாவுக்கரசுப் பெருந்தகை தமது எழுபதாவது வயதிலேயே சம்பந்தப்

பெருமானை முதன் முதலாகச் சீர்காழியில் சந்தித்தார் என்பது பெறப்படுகிறது.

மற்றொன்றும் இங்குச் சிந்திப்பதற்குரியது. மேற்படி நூலின் பக்கம் (868)–ல் திருநாவுக்கரசருக்கு அறுபது வயதுக்கு மேற்பட்டிருக்கும் நிலையிலேயே, அவர் சமணத்தொடர்பு ஒழித்துச் சைவ சமயத்தை மேற்கொண்டார் என்ற செய்தி உள்ளது. இதிலிருந்து சைவம் சார்ந்து பத்து ஆண்டுகட்குப் பின்னரே, நாவுக்கரசுப் பெருந்தகையார் சம்பந்தப்பெருமானை முதன்முதல் சந்தித்தார் என்பதும், சம்பந்தப் பெருமானின் உபநயனச் சடங்கு நிகழ்ச்சிக்குப் பிறகு, (அவர் ஞானப்பால் உண்டு நான்கு ஆண்டுகள் கழித்தே) திருநாவுக்கரசர் அவரை முதன்முதலில் சந்தித்தார் என்பதும் பெறப்படுகின்றன.

கெழுதகை நண்பர்களான இவ்விருபெருமக்களும் இணைந்து, சைவ சமயத்தைத் தமிழ்நாடு முழுவதும் ஊர் ஊராகச் சென்று பரப்பினார்கள்.

சம்பந்தப்பெருமான், சிவபெருமானின் பெருமைகளைப் பாடிப் பரவிச் சைவத்தைப் பரப்பினார். நாவுக்கரசுப் பெருந்தகை அவ்வாறு பாடிப் பரவியதோடமையாது, உழவாரத் திருப்பணியும் செய்து சைவத்தை மேலோங்கச் செய்தார்.

நாவுக்கரசுப் பெருந்தகை, சமணை விட்டுச் சைவம் சார்ந்தபோது, அவருக்கு அளவற்ற தீங்குகளைச் சமணர்கள் செய்தனர். அவற்றையெல்லாம், இறைவன் திருவருளால், முறியடித்த பெருமானார் 'பழையாறை' என்னும் தலத்தை அடைந்தபோது, அங்குள்ள 'வடதளி' என்னும் கோயிலின் விமானம், வஞ்சமனமுடைய சமணர்களால் மறைக்கப்பட்டிருந்ததைக் கண்டார். 'அம் மறைப்பை அகற்றினாலன்றி, அவ்விடத்தை விட்டு அகலமாட்டேன்' என்று உறைப்புக் கொண்டு உண்ணுநோன்பு மேற்கொண்டார். பின்பு அரசன் வந்து புதியதொரு விமானம் அமைக்க ஏற்பாடு செய்த பின்னரே நாவுக்கரசர் உண்ணுநோன்பைக் கைவிட்டார். இவ்வுண்மை நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான்,

> "வண்ணங் கண்டு நான் உம்மை
> வணங்கியன்றிப் போகேன் என்று
> எண்ணம் முடிக்கும் வாகீசர்
> இருந்தார் அமுது செய்யாதே" (21-296)

என்று கூறியருளியுள்ளார். இன்றைக்குச் சற்றேறக்குறைய 1400



ஆண்டுகட்கு முன்பே, உண்ணாநோன்பு இருந்து அறவழியில் காரிய சாதனைக்கு முதன்முதல் வித்திட்டவர் நாவுக்கரசுப் பெருந்தகையே என்பது இங்கு நினைவுகூர்தற்குரியது.

உள்ளன்போடு இறைவழிபாடு செய்வதையே நாவரசர் தம் பாசுரங்களில் வற்புறுத்துகின்றார். வேடதாரிகளின் வழிபாட்டைக் கண்டு இறைவனே வெட்கப்பட்டு நிற்கிறான் என்கிறார். இதனை,

> "நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
> புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்,
> பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு
> நக்கு நிற்பர் அவர்தம்மை நாணியே" (5-90-6)

என்றருளிச் செய்துள்ள தேவாரம் தெளிவுபடுத்துகின்றது.

## 2. திருஞானசம்பந்தரின் சமய முழக்கம் :

திருமுறை ஆசிரியர்களில் திருஞானசம்பந்தரே தமிழ்மொழிக்கும் இசைக்கும் ஏற்றம் தந்தவர். 'தம்மைத் தமிழ் ஞானசம்பந்தன்' எனப் பல இடங்களில் அவரே கூறியுள்ளார்.

சைவ சமயத்தின் தலையாய கொள்கையாகச் 'சிவப்பெருமானை அன்றி வேறு எந்த தெய்வத்தையும் வழிபடலாகாது' என்பதையே சம்பந்தப்பெருமான் கொள்கிறார்.

> "கைச்சிறு மறியவன் கழல் அலால் பேணாக்
> கருத்துடை ஞானசம்பந்தன்" (1-77-11)

என அவர் தம்மைக் கூறிக்கொள்வதிலிருந்து இவ்வுண்மை புலனாகும்.

பதிகந்தோறும் பாடல்களை அமைப்பதில் ஓர் ஒழுங்கு முறையைப் பெரும்பாலான பதிகங்களில் சம்பந்தப்பெருமான் மேற்கொண்டுள்ளார். எட்டாவது பாட்டில் இராவணன் கயிலையை அசைத்த வரலாற்றையும், ஒன்பதாவது பாட்டில் அடிமுடிதேடிய அயன் – மால் வரலாற்றையும், பத்தாவது பாட்டில் சமணசாக்கியர்களின் இறைமறுப்புக் கொள்கையைச் சாடியும் கூறுவார். இந்த மூன்று நிகழ்ச்சிகளும் முறையே ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல நீக்கத்தைக் குறிக்கின்றன. பதினோராவது பாட்டில் ஆகிய திருக்கடைக்காப்பில் பதிகப்பயன் கூறியருளித் தம் ஊரையும்

திருப்பெயரையும் அதில் குறிப்பிடுகிறார். இதனால், ஒவ்வொரு பதிகமும் ஒவ்வொரு பத்திரம் ( DOCUMENT ) போல் அமைந்துள்ளது.

பதிகப்பயன் கூறும்பொழுது, தம் பதிகங்களைப் படனம் செய்பவர்களுக்குத் ' துன்பம் நீங்கும் ; இன்பம் பெருகும் ' என்பன போன்ற அருளிப்பாடுகளைக் கூறுவார். சம்பந்தப்பெருமான் பதிகங்களை நாள் தவறாமல் படனம் செய்பவர்கள் ஊழ்வலியிலிருந்து விடுபடுவதோடு, இப்பிறப்பிலேயே வீடுபேற்றினை அடைவர் என்று ஆணையிட்டுக் கூறுகிறார்.

" ஞானசம்பந்தன் வாய் நவிற்றிய தமிழ்மாலை
...... சொலக் கேட்டு உகந்தவர்தம்மை வாதியா
வினை; மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம்
வந்து அடையாவே " (2-106-11)

என்றும்,

" நான்மறை நாவன் நற்றமிழ்க்கு இன்துணை
ஞானசம்பந்தன் ...... பத்தும் வல்லார்போய்,
வெந்துயர் கெடுகிட விண்ணவரோடும் வீடு
பெற்று, இம்மையின் வீடு எளிதாமே " (1-70-11)

என்றும் அவர் அருளிச்செய்துள்ளமை, இவ்வுண்மைக்கு அகச் சான்றுகளாக உள்ளன.

சமணர்களுடன் வாதிட்டு, சைவத்தை நிலை நாட்டிய தோடல்லாமல், திருநீற்றின் பெருமையினைப் பாடிப் பரவினார் சம்பந்தப்பெருமான்.

சம்பந்தப்பெருமானும் நாவுக்கரசுப்பெருமானும் இணைந்து பணியாற்றி, அடைக்கப்பட்டிருந்த கோயில்களைத் திறந்தனர்; பஞ்சத்தில் வாடிய அடியார்களுக்குப் படிக்காசு பெற்றுப் பசியைப் போக்கினார்கள்,

இவ்விரு பெருமக்கள் காலத்தில், சமணிருளால் இருண்டிருந்த தமிழ்நாடு சைவ ஒளி பெற்றது. சைவம் தழைத்தோங்கியது சமணர்களாக இருந்த மன்னர்கள் பலர் சைவர்களாக மாறினர். இறை



நெறிக்கு எதிராக இருந்த சமண் சமயம் வேரோடு வீழ்ந்தது; சைவம் இன்றளவும் நின்று ஓங்க வித்திட்டவர்கள் இவ்விரு பெருமக்களே ஆவர்.

### 3. சுந்தரரின் காலச் சூழ்நிலை :

சுந்தரமூர்த்தி சுவாமிகள் கி. பி. 701-ல் திருமுனைப்பாடி நாட்டின் தலைநகர் ஆகிய திருநாவலூர் என்னும் ஊரில் அவதரித்தார். அவர்க்குப் பெற்றோர் இட்டபெயர் 'ஆரூரன்' என்பதாகும்; அழகு நிரம்பியவராக இருந்தமையால் 'நம்பி' என்ற சிறப்புப் பெயர் ஏற்பட்டது. எனவே, இவரை 'நம்பியாரூரர்' எனப் போற்றுவர்.

திருநாவுக்கரசர் சிவப்பேறு பெற்று, 55 ஆண்டுகள் கழித்து நம்பியாரூரர் தோன்றினார். சம்பந்தரும் நாவரசரும் வித்திட்ட சைவப் பயிர் நன்கு வளர்ந்து மக்கள் சைவசமயத்தின் பயனைத் துய்த்து வரும் அமைதியான காலச்சூழ்நிலையில் நம்பியாரூரர் அவதரித்தார். எனவே, அவர் காலத்தில் எங்கும் சைவம், எதிலும் சைவம் என்று மக்கள் மகிழ்ந்திருந்தனர்.

நம்பியாரூரர் வடமொழிவேதத்தையும் தமிழ்மொழிவேதத்தையும் போற்றிப் பாடியுள்ளார். யசுர் வேதத்தில் உள்ள 'ஸ்ரீருத்ரம்' என்னும் தெய்வப்பனுவலைப் பாடியே முத்தி பெற்ற உருத்திர பசுபதி நாயனாரைப் போற்றிப் பேசுகிறார் நம்பியாரூரர் ஆகிய சுந்தரர்.

சிவப்பேறு பெற்ற அறுபத்து மூன்று நாயன்மார்களைப் பற்றிய வரலாற்றைத் தமிழ் மக்கள் அறிந்து, சைவ வாழ்வு வாழும் முறையை உணரும் பொருட்டே இறைவன் சுந்தரரை இப்பூவுலகில் தோன்றுமாறு செய்தான் என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார். சுந்தரர் அவ்வாறு பாடியருளியது "திருத்தொண்டத்தொகை" எனப்படும்.

திருத்தொண்டத்தொகையில், சமயகுரவர் நால்வருள் மணிவாசகர் வரலாறு இடம் பெறவில்லை எனவே, மணிவாசகப் பெருந்தகை மூவருக்கும் பிற்பட்ட காலத்தைச் சேர்ந்தவர் என்று வரலாற்றுப் பேராசிரியர்கள் கூறுகிறார்கள்

சம்பந்தர் நாவரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிப் பரவிய பனுவல்கள் "தேவாரம்" என அழைக்கப்படுகின்றன. 'தேவாரம்' என்ற சொல்லுக்கு தெய்வத்தின் புகழைப்பாடுதல் என்று பொருள். சைவர்களுக்குத் தெய்வம் சிவபெருமானே ஆதலின், சிவனைப்

போற்றிப் பரவும் பாடல்கள் தேவாரம் எனப்படுகின்றன. இதனை 'மூவர் தேவாரம்' என்றும் 'அடங்கன் முறை' என்றும் கூறுவர்.

இம்மூன்று பெருமக்களும் பாடிப் பரவிய தேவாரம் பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளாகப் பெரும் இடத்தை வகிக்கின்றது.

கி. பி. 575 முதல் கி. பி. 718 ஆகிய ஏறத்தாழ 140 ஆண்டுகள். சைவம் மீண்டும் தலைதூக்கிச் செழித்து வளர்ந்து ஓங்கி வந்திருந்தது என்பது இதனால் புலப்படுகிறது.

## 4 மாணிக்கவாசகர் காலம் :

மாணிக்கவாசகர் காலத்தைப் பற்றியப் பல செய்திகள் உள்ளன. அவர் கி. பி. 300 – ல் வாழ்ந்தவர் என்று மறைமலை அடிகள் நீண்டதோர் ஆராய்ச்சி செய்துள்ளார். மாணிக்கவாசகர் மூவர் முதலிகள் ஆகிய தேவார ஆசிரியர்களுக்குப் பிற்பட்டவர் என்பதே ஆய்வுக்குப் பொருத்தமாக உள்ளது. வரலாற்றுப் பேராசிரியர் வை. சதாசிவப் பண்டாரத்தாரின் ஆய்வை மேற்கோள் காட்டிப் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் அவர்கள், "பன்னிரு திருமுறை வரலாறு – இரண்டாம் பகுதி" பக்கம் 129–ல் இவ்வுண்மையைத் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

அதே பக்கத்தில் "அடிகள் வாழ்ந்த காலம் ஆதிசங்கரர் வாழ்ந்த காலத்தை ஒட்டியது" என்று குறிப்பிட்டிருப்பதால், முதல் வரகுண பாண்டியன் வாழ்ந்த கி. பி. 795 முதல் 835 வரையுள்ள காலத்திலேயே மணிவாசகப் பெருந்தகை வாழ்ந்திருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

மூவர் முதலிகளுக்கும் பிற்காலத்தில் வாழ்ந்த மணிவாசகர், தேவாரம் என்னும் தேமதுரத் தீந்தமிழ்த் தெய்வப்பனுவல்களை அருளிச் செய்த திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஆகியோரைப் பற்றிய செய்தி எதனையும் தமது திருவாசகத்தில் குறிப்பிடாமல் விட்டதற்கு என்ன காரணம் என்ற தடை, நீண்ட நெடுங்காலமாகச் சைவசமயத்தில் ஆர்வமுள்ளவர்களிடம் இருந்து வருகிறது. அத்தடைக்கு விடைகூறுவது அவ்வளவு எளிதான செயலன்று; அவ்வாறு விடைகூறுதற்கு முயன்றாலும், அவ்விடைக்கு ஆதாரமான தடையங்கள் பெரும்பாலும் அழிக்கப்பட்டு விட்டமையால், ஓரளவு ஊகித்தே விடை கூற முடிகிறது.



மூவர் அருளிய தேவாரங்கள் ஆகிய ஏழு திருமுறைகளும், தில்லைக்கோயிலில் முடக்கப்பட்டுப் பின்னர், நம்பியாண்டார் நம்பிகளின் அருள்திறத்தால் இராசராசசோழன் மீட்பித்தான் என்ற செய்தி யாவரும் அறிந்ததே. அந்தக் காலத்தில் அச்சு இயந்திரம் இல்லாததால். அனைத்துத் தேவாரங்களும் ஏட்டுச் சுவடிகளிலேயே இருந்திருக்கின்றன. அந்த ஏட்டுச் சுவடிகள் பலபடிகளாக எடுக்கப்பட்டு, பல சைவ அன்பர்கள் வீடுகளில் பூசிக்கப்பட்டு வந்தன. அன்றையச் சூழ்நிலையில், சிவாகமக் கொள்கைகளைத் தெளிவாகப் புரிந்து கொள்வதற்காகச் சைவ அறிஞர்கள் எழுப்பும் தடைகளுக்குத் தக்க விடை அளிப்பது, அன்று தமிழகத்தில் பரவி வந்த மதக்கொள்கைகளைக் கடைப்பிடித்து வந்தவர்களுக்குப் பெரிதும் இடையூறாக இருந்திருக்கிறது. அவர்களுள் ஒரு சாரார், அன்று தில்லைக்கோயில் பொறுப்பில் இருந்தவர்களுடன் சேர்ந்து ஒரு திட்டம் வகுத்துத் தேவாரங்களைத் தில்லைக்கோயிலில் பூட்டி வைத்துச் செல்லரிக்கும்படி செய்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கூறும் அளவுக்கே இதனைக் குறித்துக் கூற முடிகிறது.

இந்நிகழ்ச்சி, மணிவாசகப் பெருந்தகை அவதரிப்பதற்கு முன்பே அஃதாவது கி. பி 795க்கு முன்பே நடத்திருக்க வேண்டும். மணிவாசகர் காலத்தில் தேவாரம் இருந்த அடிச்சுவடே இல்லாமலிருந்திருக்கிறது. திருத்தொண்டத் தொகையும் தேவாரங்களோடு சேர்த்து முடக்கப்பட்டுவிட்டதால், தேவாரம் அருளிய மூவர் வரலாறு மணிவாசகருக்கு எட்டாமலே போய்விட்டது. எனவே, மூவர் முதலிகளைக் குறித்து மணிவாசகர் ஏதும் குறிப்பிடவில்லை என்பது போதரும்.

அவ்வாறுயின், கண்ணப்பநாயனாரைக் குறித்தும் சண்டேசரைப் பற்றியும் உள்ள செய்திகள் திருவாசகத்தில் எப்படி இடம்பெறலாயின என்ற ஒரு தடை எழுகிறது. இவ்விரு பெருமக்களைக் குறித்து எழுந்த செவிவழிச் செய்திகளின் அடிப்படையிலேயே, திருவாசகத்தில் அவை இடம் பெறலாயின. அந்த அளவுக்கு மூவர் முதலிகளைப் பற்றிய செய்திகள், மக்களிடையே பரவவில்லை; அதற்குக் காரணம் மூவர் முதலிகளின் திருவாக்குகளில் உள்ள சிவாகம நுட்பங்களைப் புரிந்து கொள்ளும் அளவுக்குக் கல்வியறிவு அன்று வளராமல் இருந்திருக்கிறது என்பதே ஆகும்.

அக்குறையினைப் போக்கும் வகையில் திருவாசகம் வாயிலாகப் பல சிவாகம நுட்பங்களை, நமக்கு அறிவுறுத்தும் பொருட்டு

இறைவன் மணிவாசகப் பெருந்தகையை இப்பூவுலகில் அவதரிக்கும்படி அருளிச் செய்தான். திருவாசகத்தில் காணப்படும் சிவாகம நுட்பங்களுள் சில வருமாறு;

1. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைப் பற்றிய செய்தி. (திருத்தசாங்கம்.)
2. பசு பாசம் என்னும் ஆகமச் சொற்கள் (கண்டபத்து – 7)
3. பழமலம் என்னும் மூலகன்மம், (திருப்பாண்டிப்பதிகம் – 8)
4. இறைவனின் வியாபகத்தன்மை (கோயில் திருப்பதிகம் 7)
5. முத்தியில் உயிர் சிவமாம் தன்மைபெறும் போது அங்கும் உள்ளது என்னும் பேருண்மை (அச்சோப்பதிகம் 1) போன்ற பல அரிய பெரிய சைவசித்தாந்த நுட்பங்கள் திருவாசகத்தில் காணக் கிடைக்கின்றன.

மெய்கண்டசாத்திரங்களிலும் சிவஞானபாடியத்திலும் திருவாசகத்தில் உள்ள சைவசித்தாந்தக் கொள்கைகள் கையாளப்பட்டிருப்பதிலிருந்து, திருவாசகம் சைவர்களின் 'சமயக்கருவூலம்' எனக் குறிப்பிட்டுக் கூறும் அளவுக்கு அமைந்துள்ளது என்பது இங்கு நினைவில் கொள்ளத்தக்கது.

திருவாசகத்தில் உள்ள எளிய நடை எவரையும் எளிதில் கவரத்தக்கதாயுள்ளது. இதன் அருமையை அறிந்தே போப்பையர் அவர்கள் இதனை ஆங்கிலத்தில் மொழிப் பெயர்த்து உதவினார்கள்.

**பிற திருமுறைகள் :**

மணிவாசகர் காலத்திற்குப் பிறகு, அஃதாவது ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல அடியார்கள் தோன்றி, சைவசமயப் பனுவல்கள் பல அருளிச் செய்தனர். அவர்றுள் ஒன்பது அடியவர்களின் பாடல்களின் தொகுப்பை ஒன்பதாம் திருமுறையாக வகுத்தனர்.

அதன்பிறகு, 'திருமூலர்' அருளிய 'திருமந்திரம்' பத்தாம் திருமுறையாக வைக்கப்பட்டது. திருமூலர் காலத்தால் அனைத்துத் திருமுறை ஆசிரியர்களுக்கும் முற்பட்டவர் என்ற செய்தி 'வேதகாலத்திற்கு முந்திய சைவம்' என்ற தலைப்பின் கீழ்



இந்நூலில் கூறப்பட்டது நினைவிருக்கலாம். 'சித்தாந்தம்' என்ற சொல்லைத் தமிழில் முதன் முதல் திருமூலரே கையாள்கிறார். சைவசித்தாந்தக் குறியீட்டுச் சொற்கள் பலவற்றைத் திருமந்திரத்தில் காணலாம்.

திருமந்திரம், சிவாகமங்களின் சாரமாக அமைந்துள்ளது. ஒன்பது தந்திரங்களாகப் பகுக்கப்பட்டு, ஒவ்வொரு தந்திரமும் இன்ன ஆகமக் கருத்துக்களைக் கொண்டது என்பதைத் திருமந்திரம் கூறுகிறது. எனவே திருமந்திரம் திருமுறைகளில் ஒன்றாக வைத்து எண்ணப்பட்டிருப்பினும் அஃது ஒரு சைவசித்தாந்த சாத்திரமாகவே விளங்குகிறது.

திருத்தொண்டத்தொகையில், சம்பந்தப்பெருமானை 'எம்பிரான் சம்பந்தர் என்றும், திருமூலரை 'நம்பிரான் திருமூலர்' என்றும் சுந்தரர் கூறியுள்ளார். இதனால், பத்திநெறிக்குச் சம்பந்தரையும் தத்துவ நெறிக்குத் திருமூலரையும் தலைவர்களாகச் சுந்தரர் கொண்டிருக்கிறார் என்பது புலனாகிறது. இவ்வுண்மையை நாமும் கருத்தில் இருத்திப் பயில்வோமாக.

பதினோராம் திருமுறையில் நாற்பது நூல்கள் இடம் பெற்றுள்ளன. பன்னிரண்டு சிவனடியார்கள் அருளிச்செய்த நூல்களின் தொகுப்பாக இத்திருமுறை இலங்குகின்றது. எனவே, இதனை ஒரு தொகை நூல் என்றே கூறலாம். இவர்கள் வாழ்ந்த காலங்கள் பலவாறாக உள்ளன. ஒன்று முதல் பதினோரு திருமுறைகளையும் தொகுத்தவர், நம்பியாண்டார் நம்பிகள் ஆவார். இவர் அருளிய பல பனுவல்கள், அறுபத்து மூவர் வரலாற்றை விரிவாக எழுதுவதற்குச் சேக்கிழார் பெருமானுக்குப் பெரிதும் துணையாக இருந்தன. அவற்றுள் சம்பந்தப்பெருமானைக் குறித்து இவர் அருளிய ஏழு பனுவல்கள், பெரியபுராணத்தில் சம்பந்தப்பெருமான் வரலாறு, மிக விரிவாக இடம் பெறுவதற்குக் காரணமாக இருந்தன என்பது கருதத்தக்கது.

திருமுறைகளைத் தொகுத்தருளி, நமக்குப் பெரிதும் உதவியருளிய நம்பியாண்டார் நம்பிகள் வாழ்ந்த காலம் கி. பி. 870 முதல் கி. பி. 907 வரை என்று 'பன்னிரு திருமுறை வரலாறு முதற் பகுதி' என்னும் நூலின் பக்கம் (22) ல் பேராசிரியர் க. வெள்ளைவாரணனார் அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

தேவாரங்களை மீட்டுத் திருமுறைகளைத் தொகுத்து அருளிய நம்பியாண்டார் நம்பிகள் ஆற்றிய சமயத்தொண்டு பல்லாற்றானும் போற்றிப் பாராட்டத்தக்கது. இவருக்குப் பெரிதும் துணையாக நின்று, இத்தொண்டில் ஈடுபட்ட முதல் ஆதித்த சோழப் பேரரசனுக்கும் சைவ உலகம் என்றும் கடமைப்பட்டுள்ளது.

இவ்வரசனின் சமயத் தொண்டுபற்றி. வரலாற்றுப் பேராசிரியர் தி. வை. சதாசிவபண்டாரத்தார் எழுதிய பிற்காலச் சோழர் வரலாறு ( அண்ணாமலைப் பல்கலைக்கழகம் – 1974 ) என்னும் நூலின் பக்கம் 25 – 35 ல் விரிவாகக் காணலாம். சோழ மண்டலத்தை ஆண்ட அரசர்கள் பலர், சைவம் தழைத்தோங்குவதற்குச் செய்திருக்கும் சிவப்பணிகள் எண்ணில் அடங்காதன ஆகும்.

**சேக்கிழார் காலம் :**

‘திருத்தொண்டர் புராணம்’ என்னும் ‘பெரிய புராணம்’ இயற்றியருளிய சேக்கிழார் பெருமான், இரண்டாம் குலோத்துங்கச் சோழனது பிற்பகுதியிலும் மூன்றாம் குலோத்துங்கச் சோழனது முற்பகுதியிலும் வாழ்ந்தவர். ‘அநபாய சோழன்’ என்னும் சிறப்புப் பெயர் பெற்ற இரண்டாம் குலோத்துங்கன் காலத்திலேயே ‘பெரிய புராணம்’ அரங்கேறியது. இந்த அரசனின் முதலமைச்சராகச் சேக்கிழார் கி. பி. 1113 – 50ல் வாழ்ந்தவர். இற்றைக்கு ஏறத்தாழ 850 ஆண்டுகட்கு முன்பு, இம்மாபெரும் சைவ இலக்கியத்தைச் சேக்கிழார் அருளிச் செய்தார்.

பெரிய புராணம், தமிழகத்தின் சைவ சமய வரலாற்றைக் கூற எழுந்த முதல் சைவக் காப்பியம். அறுபத்து மூன்று சிவனடியார்கள் வாழ்ந்த காலத்தில், தமிழகத்தில் இருந்த பழக்க வழக்கங்கள், நடைமுறைகள், சமய வாழ்க்கை முதலிய அரிய பெரிய செய்திகளைப் பெரியபுராணத்தில் காணலாம். சிவனடியார்கள் வாழ்ந்த ஊரின் அமைப்புப்பற்றி அக்காவியத்தில் அவர் கூறியிருக்கும் செய்திகள், அவர் அந்தந்த ஊர்களுக்குச் சென்று அங்கு வாழ்ந்த மக்களிடமிருந்து செவிவழிச் செய்திகள் பலவற்றைத் திரட்டியிருக்கிறார் என்பது இனிதே புலப்படுகின்றது.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் செய்தருளிய இக்காப்பியம் தமிழ்நாட்டின் வரலாற்றுக் காப்பியம் என்று கூறினால் அது மிகையாகாது. ஆழ்ந்த சமயப்பற்றும், இலக்கியத் திறனும்,



சிவாகமத் தெளிவும், வரலாற்று ஆராய்ச்சியும், சட்டதிட்ட நுட்பமும் நிறைந்த பேரருளாளர் சேக்கிழார் என்பதைப் பெரியபுராணம் வாயிலாக நாம் அறிய முடிகிறது.

மூவர் தேவாரங்களுக்கும் அவர் கொடுக்கும் விளக்கம், தேவாரங்களைத் திரும்பத் திரும்பப் படனம் செய்யும் பழக்கத்தைச் சேக்கிழார் கொண்டிருந்தார் என்று கருதும்படியுள்ளது.

சைவ சமய வாழ்க்கை எத்தகையதாக இருக்க வேண்டும் என்பதற்கு ஓர் இலக்கணம் வகுத்துத் தந்திருக்கிறது பெரியபுராணம். எனவே இதனைப் பன்னிரண்டாம் திருமுறையாக வைத்தான் அநபாய சோழன்.

## மெய்கண்ட நூல்கள் தோன்றக் காரணமாக இருந்த காலச் சூழ்நிலை

கி. பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை தமிழ்நாட்டில் சைவ நெறியோடு வைதிக நெறிகளும் வளர்ந்து வந்தன. மூவர் முதலிகள் அருளிய திருப்பதிக வழக்கோடு வடமொழி வேத வழக்கும் சிவாகம வழக்கும் சிறப்புற்று விளங்கின.

கி. பி. எட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வடமொழி வேதவழக்கு மேலோங்கியது. வேதாந்தம் எனப்படும் உபநிடதங்களுக்குப் பிரம சூத்திரங்களைக் கொண்டு. பொருள் நிச்சயிக்கும் முக்கியத்துவம் வழக்கில் வந்தது. பிரமசூத்திரங்களுக்கும் 'வேதாந்தம்' எனப்படும் உபநிடதங்களுக்கும் பல உரைகள் வெளிவந்தன. உரையாசிரியர்களின் மாறுபட்ட கருத்துக்கள், தமிழ் நாட்டில் பல்வேறு மதங்களைத் தோற்றுவிக்கும் சூழ்நிலையை உருவாக்கின. வேதங்களைக் காட்டிலும் வேதாந்த உரையாசிரியர்கள் பெரிதும் போற்றப்பட்டனர் என்று ஸ்ரீ ருத்ரம் முன்னுரையில் திரு. கே. எஸ். இராமசுவாமி சாஸ்திரி குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு, பல்வேறு மதங்களைத் தோற்றுவித்தவர்களுள், ஆதிசங்கரர், இராமாநுசர், மத்துவர் முதலியவர்கள் குறிப்பிடத் தக்கவர் ஆவர்.

**ஆதிசங்கரர் :**

கி. பி. 788-ல் வடதிருவாங்கூரின் ‘காலடி’ என்னும் இடத்தில் தோன்றியவர். இந்த இடம் இப்போது கேரள மாநிலத்தில் உள்ளது. அவர் தோன்றிய காலத்தில், சேர நாடாக இருந்த அப்பகுதியில் தமிழ்மொழியே வழக்கில் இருந்திருக்கிறது. மலையாளம் என்னும்

மொழி எழுத்தச்சன் காலத்தில் தோன்றியது. எழுத்தச்சன் கி. பி. 825-ல் வாழ்ந்தவர். எனவே, அவருக்கு முன்பு வாழ்ந்த ஆதிசங்கரர் காலத்தில் அப்பகுதியில் தமிழ்மொழியே பேசப்பட்டு வந்திருக்கிறது.

சுந்தரர் காலமாகிய கி. பி. 701 முதல் 716 வரையில் அவருடைய கெழுதகை நண்பராக இருந்த மலைநாட்டு வேந்தராகிய சேரமான் பெருமாள் நாயனார் அருளிச்செய்த தமிழ்ப்பனுவல்கள் பதினோராம் திருமுறையில் இடம் பெற்றுள்ளன. சேரமான்பெருமாள் காலத்திற்குப் பின்னரும், தமிழ்மொழியே அப்பகுதியில் வழக்கில் இருந்திருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. எனவே ஆதிசங்கரர் காலத்தில் அப்பகுதியில் தமிழ்மொழியையே மக்கள் பேசிவந்தனர் என்பது தெளிவு.

ஆதிசங்கரர் காலம் கி. பி. 788 என்பது வரலாற்றுப் பேராசிரியர் சதானந்த பண்டிட்ஜியின் கருத்து. ஆதிசங்கரருக்கு அண்மையில் 1200 – ஆவது ஜயந்தி நடந்ததை அனைவரும் அறிவர். ஆயினும் அவரது காலம் கி. மு. 608 என்று சிலர் கூறிவருகிறார்கள். (ஆதாரம்; 'சக்தி' மார்ச்சு 83 இதழ்). இவ்வாறு கூறுவதற்குத் தக்க பிரமாணம் ஏதும் இல்லை. எனவே ஆதிசங்கரர் தோன்றியது கி. பி. 788 என்பதே உண்மையாகும்.

வேதாந்த உரையாசிரியர்களுள் ஒருவர் ஆகிய ஆதிசங்கரரது கொள்கையே இந்துமதக் கொள்கை என்று பெரும்பாலோர் இக்காலத்தில் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அவரது கொள்கை வருமாறு :

"முக்கிய உபநிடதங்களின் முடிவு (வேதாந்தம்) பிரமம் ஒன்றே உள் பொருள் ; உலகம் பிரமத்தின் தோற்றமே"

இக்கொள்கை, சைவ சித்தாந்தக் கொள்கைக்குப் பொருந்தாது. சைவசித்தாந்தம், "கடவுள் உயிர் உலகம் (பதி, பசு, பாசம்) மூன்றும் உள்பொருள்கள் ; அவை ஒன்றிலிருந்து பிறிதொன்று தோன்றியதெனக் கூறப்படாதவை ; அம்மூன்று பொருள்களும் என்றும் உள்ளவை" – எனக் கூறுகிறது.

அத்துவைதம் என்று சொல்லுக்கு ஆதிசங்கரர் கொண்ட பொருள் வருமாறு.

"அத்துவைதம் என்பது இரண்டாவது ஒரு பொருளின் இன்மையைக் குறிக்கும்; அஃதாவது, பொருள் ஒன்றே என்பது



முடிவு; பிரமம் அறிவு மாத்திரையாக உள்ள தனிப்பொருள் தமது ஒருபொருட் கொள்கையினை வலியுறுத்திக் 'கேவலம் ஒன்று' என அவர் கூறியதால், அவர் மதம் 'கேவலாத்துவிதம்' எனப்பட்டது.

திருமுறைகள் அனைத்தும் சைவசித்தாந்தக் கொள்கைகளையே வலியுறுத்துகின்றன. திருஞானசம்பந்தர் தேவாரத்தில், கடவுள், உயிர், ஆணவம், கன்மம், மாயை ஆகிய ஐந்து பொருள்கள் என்றும் உள்ளவை என்னும் சிவாகமக்கருத்து பேசப்படுகிறது. அது வருமாறு.

*"விளையாததொர் பரிசில்வரு பசு, பாச, வேதனை, ஒண்*
*தளையாயின தவிரவ்வருள் தலைவன்னது சார்வாம்"*

சம்பந்தப் பெருமான் வாக்கிலிருந்து, இரு உண்மைகள் புலப்படுகின்றன. அவை வருமாறு,

1. திருமுறைகள் சிவாகமக் கொள்கைகளையே முழக்குகின்றன.
2. ஆதிசங்கரர் மதத்தைத் திருமுறைகள் ஏற்கவில்லை.

**இராமானுஜர் :**

ஆதிசங்கரருக்குப் பிறகு இருநூறு ஆண்டுகள் கழித்துத் தோன்றியவர் இராமானுஜர். இவரது காலம் கி. பி. 988 ஆகும். இவர் செங்கற்பட்டு மாவட்டத்தில் திருப்பெரும்புதூரில் அவதரித்தவர்.

ஆதிசங்கரர் மதத்தை மறுத்து இவர், வேறொரு மதம் நிறுவினார். 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு, இவர், கூறிய விளக்கம் வேறு விதமாக உள்ளது. அது வருமாறு;

'அரசன் ஒருவனுக்குக் குடிமக்கள், ஆடையாபரணங்கள் இருப்பது எவ்வளவு உண்மையோ, அதுபோல, பிரமம் ஆகிய இறைவனுக்கு உயிர்கள் ஆகிய அடிமைகளும் உலகமாகிய உடைமையும் உண்டு. பிரமத்திற்கு அனந்தகலியாண குணம் உண்டு. இவ்வாறு விசேடிக்கப்பட்டு (சிறப்பாக) விசிட்டமாய் உள்ள பிரமம் ஒன்றே, என்பதே இராமாநுஜரின் மதம். இவ்வாறு தமது கருத்தை இராமாநுஜர் விசிட்டம் என்னும் அடைமொழி கொடுத்து விளக்கியதால் இவரது மதம் 'விசிட்டாத்துவிதம்' எனப்படுகிறது.

'இறைவனுக்கு' உயிர்கள் அடிமை; உலகம் உடைமை, என்று இராமாநுஜர் கூறிய விளக்கம் சைவசித்தாந்தக் கொள்கைக்கு உடன்பாடானதே ஆகும். ஆயினும், 'அத்துவிதம், என்ற சொற்குப் பொருள் கூறும்போது, இராமானுசரும் ஆதிசங்கரர் கூறுவதுபோல் இன்மைப் பொருள் கொண்டு இரண்டாவது பொருள் இல்லை; பிரமம் ஒன்றே உள்ளது. என்று அவர் கூறியுள்ளார் இது சைவசித்தாந்தக் கொள்கைக்குப் பொருந்துவதாக இல்லை. எனவே, இராமாநுஜர் மதமும் சைவசமயத்திற்கு உடன் பாடானதாக இல்லை.

அத்துவிதம் என்ற சொற்குச் சைவசித்தாந்தம் கொள்ளும் பொருள் வருமாறு:

கடவுளும் உயிர்களும் வேறு வேறு பொருள்கள். கடவுள் உள்ள காலத்திலிருந்தே உயிர்களும் உள்ளன. கடவுளின் உதவியின்றி உயிர்களுக்கு இருப்பும் இல்லை; இயக்கமும் இல்லை. உயிர்கள், கடவுளின் நிறைவில் (வியாபகத்தில்) தங்கியிருக்கும் பொருட்டுக் கடவுள் உயிர்களோடு என்றும் ஒன்றாய் இருக்கின்றார், உயிர்களுக்கு உணர்த்தும் பொருட்டுக் கடவுள் உயிர்களின் வேறாய் இருக்கிறார் உயிர்கள் இயங்கும் பொருட்டுக் கடவுள் உயிர்களோடு உடனாய் இருக்கிறார். கடவுளுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்புகள் இத்தகையன ஆகும்.

**மத்துவர் :**

இவரது காலம் கி. பி. 1238 முதல் 1318 வரை ஆகும். இவரது இயற்பெயர் 'ஆனந்ததீர்த்தர்' ஆகும். இவர், ஆதிசங்கரர், இராமானுஜர் ஆகிய இருமதாச்சாரியர்களின் கொள்கைகளையும் மறுத்து, பிரமசூத்திரங்களுக்கு உரை எழுதும்போது, வேறொரு புதிய மதத்தை நிறுவினார். இவரது மதம் 'பேதவாதம்' (துவைதம்) எனப்படும். இவரது காலம், மெய்கண்டார் காலத்திற்குப் பிற்பட்டது. கடவுளுக்கும் உயிர்களுக்கும் எந்தவிதத் தொடர்பையும் ஏற்படுத்தாததால், ' இவரது மதமும் சைவசித்தாந்தத்திற்கு உடன்பாடானதன்று.

ஆதிசங்கரர், இராமானுஜர் போன்றவர்களின் தோற்றம் காரணமாக, இந்துமதக் கொள்கைகள் பல்வேறு கோணங்களில் உருவெடுக்கலாயின, எனவே, பன்னிரு திருமுறைகளுக்குப் பொருள் கொள்வதில், தமிழ் மக்களிடையே தெளிவற்ற போக்கு ஏற்படலாயிற்று. அத்தகையதொரு சூழ்நிலையிலேயே, சிவாக



மங்களின் சாரம் ஆகிய சைவசித்தாந்த நூல்களை, நாம் அனைவரும் தெளிவு பெறும் பொருட்டு, இறைவன் தோற்றுவித்தருளினான். எனவே, சைவ சித்தாந்தக் கொள்கைக்கு மாறாகத் திருமுறைகளுக்குப் பொருள் கொள்வது, இறைவன் சங்கற்பத்திற்கு எதிரானது ஆகும். மெய்கண்டார் அருளிய சிவஞானபோதம், அருணந்திசிவம் அருளிய சிவஞானசித்தியார், உமாபதிசிவம் அருளிய சிவப்பிரகாசம் முதலிய மெய்கண்ட சாத்திரங்கள் துணைக்கொண்டே திருமுறைகளுக்குப் பொருள் கொள்ள வேண்டும் என்பது இன்றியமையாததாயிற்று.

இனிமெய்கண்ட நூல்கள் எனப்படும் சித்தாந்த சாத்திரங்கள் பற்றிய செய்திகளைக் காண்போம்.

**மெய்கண்ட நூல்களின் காலம் :**

திருவுந்தியார் முதல் சங்கற்ப நிராகரணம் வரை மெய்கண்ட நூல்கள் பதினான்கு உள்ளன. இவற்றை வேறு வேறு காலத்தில் வேறு வேறு ஆசிரியர்கள் அருளியுள்ளார்கள். அவற்றின் விவரம் வருமாறு :

| | நூலின் பெயர் | அமைப்பு | ஆசிரியர் பெயர் | காலம் |
|---|---|---|---|---|
| 1. | திருவுந்தியார் | 45 கலித்தாழிசைகளால் அமைந்தது | திருவியலூர் உய்யவந்த தேவநாயனார் | கி. பி. 1147 |
| 2. | திருக்களிற்றுப்படியார் | 100 திருவெண்பாக்களால் ஆயது | திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் | கி. பி. 1177 |
| 3. | சிவஞான போதம் | 12 சூத்திரங்களால் அமைந்தது. உண்மை இயல், இலக்கண இயல், சாதன இயல், பயனியல் என்று நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. | மெய்கண்டார். | கி. பி. 1232 |

| | | | | |
|---|---|---|---|---|
| 4. | சிவஞான சித்தியார் | பரபக்கம் – 301 திருவிருத்தங்களை உடையது. சுபக்கம் (328) திருவிருத்தங்களைக்கொண்டது. | மெய்கண்டாரின் மாணவர் அருணந்திசிவனார். | கி. பி. 1232 |
| 5. | இருபா இருபஃது | வெண்பா, ஆசிரியப்பா என்னும் இருவகைப்பாக்களால். அந்தாதித்தொடை அமையப்பாடப்பட்டது. 20 செய்யுள்களால் ஆயது. | மேற்படி | மேற்படி |
| 6. | உண்மை விளக்கம் | 53 வெண்பாக்களால் அமைக்கப்பட்டது. | மெய்கண்டாரின் மற்றொரு மாணவர், திருவதிகை மனவாசகங் கடந்தார். | மேற்படி |
| 7. | சிவப்பிரகாசம் | 100 திருவிருத்தங்களால் ஆயது. | அருணந்தி சிவனாரின் மாணவர் ஆகிய மறைஞானசம்பந்தரின் மாணவர், உமாபதி சிவனார். | கி. பி. 1313 |
| 8. | திருவருட்பயன் | அதிகாரம் ஒன்றுக்குப் பத்துக் குறள் வீதம் 100 குறட்பாக்களால் ஆயது. | சிவப்பிரகாசம் முதல் சங்கற்ப நிராகரணம் வரையுள்ள எட்டு நூல்களும் உமாபதி சிவம் அருளியது. | |
| 9. | வினாவெண்பா | 13 – வெண்பாக்களால் ஆயது. | | |
| 10. | போற்றிப் பஃறொடை | (95) கண்ணிகளையும் இறுதியில் ஒரு வெண்பாவையும் உடையது. | | |



| | | |
|---|---|---|
| 11. | கொடிக்கவி | ஒரு கட்டளைக் கலித்துறையும் நான்கு வெண்பாக்களும் ஆக ஐந்து பாட்டுக்களால் ஆயது. |
| 12. | நெஞ்சுவிடுதூது | 'கலிவெண்பா' யாப்பில் அமைந்த (129) கண்ணிகளை உடையது. |
| 13. | உண்மைநெறி விளக்கம் | ஆறு செய்யுட்களைக் கொண்டது. |
| 14. | சங்கற்ப நிராகரணம் | 13 அகவற்பாக்களையும் ஒரு வெண்பாவையும் உடையது. |

இந்தப் பதினான்கு மெய்கண்ட சாத்திரங்களையும் குறிக்கும் வெண்பா ஒன்றுள்ளது. அது வருமாறு.

" உந்தி (1) களிறு (2) உயர்போதம் (3) சித்தியார் (4)
பிந்திருபா (5) உண்மை (6) பிரகாசம் (7) வந்த அருட் (8)
பண்பு வினா (9) போற்றி (10) கொடி (11) பாசமிலா
நெஞ்சுவிடு (12) உண்மை நெறி (13) சங்கற்பம் உற்று (14)"

இவ்வெண்பா, யாரால் இயற்றப்பட்டது என்பதற்கு ஆதாரம் இல்லை. இவ்வெண்பாவில் உள்ளபடி, மெய்கண்ட சாத்திரம் பதினான்கு என்பது பெறப்படுகிறது. இவற்றுள் ' உண்மைநெறி விளக்கம் ' என்னும் நூல், பதினான்கனுள் ஒன்று அன்று என்றும், சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் இயற்றிய ' துகளறு போதம் ' என்னும் நூல் பதினான்கனுள் ஒன்று என்றும் சிலர் கருதுகிறார்கள். அக்கருத்துக்குத் தக்க பிரமாணம் இல்லாமையால், அஃது ஏற்கத்தக்கதன்று.

## மெய்கண்டார் காலத்திற்கு முற்பட்ட மூன்று நூல்கள்

மெய்கண்டாரின் காலம் கி. பி. 1232 என்பது வரலாற்றுப் பேராசிரியர், தி. வை. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் கருத்தாகும். ' தமிழ் இலக்கிய வரலாறு ' என்னும் தமது நூலின் பக்கம் (30–ல்) " உமாபதி சிவத்திற்கு எண்பத்தோராண்டுகட்கு முன் கி. பி. 1232–ல் மெய்கண்ட தேவர் இருந்தனர் என்பது எவ்வாற்றானும் ஏற்புடைத் தேயாம் " என்று அவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

மெய்கண்டார் காலத்திற்கு முன்பு, 'திருவுந்தியார்' என்னும் நூல் கி. பி. 1147-ஆம் ஆண்டிலும், 'ஞானாமிர்தம்' என்னும் நூல் கி. பி. 1163-78-லும். 'திருக்களிற்றுப்படியார்' என்னும் நூல் கி. பி. 1177-லும் தோன்றியுள்ளன. அவற்றுள் திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் ஆகிய இருநூல்கள் பதினான்கு சாத்திரங் களுள் சேர்க்கப்பட்டுள்ளன. 'ஞானாமிர்தம்' என்னும் நூல் பதினான்கனுள் ஒன்றாகச் சேர்க்கப்படாததற்குக் காரணம் ஆராய்ச்சிக்கு உரியது.

**ஞானாமிர்தம் :**

இந்நூல் அகவற்பாக்களால் ஆயது. எழுபத்தைந்து தலைப்புக் களில் சைவசித்தாந்த நுட்பங்களைக் கூறுகிறது. இதன் ஆசிரியர் 'வாகீசமுனிவர் ஆவார். சைவசித்தாந்தத்திற்குச் சிறந்த பிரமாண நூலாக, இது கொள்ளப்பட்டிருக்கிறது. எனவே, சிவஞான பாடியத்தில் பதினைந்து இடங்களில் சிவஞானசுவாமிகள், இந்நூலை மேற்கோள் காட்டியிருக்கிறார்கள்

அஞ்ஞானமாகிய கடலில், ஆகமங்கள் என்னும் மத்தை நாட்டிக் குருநாதரின், உபதேசம் என்னும் கயிற்றால், புத்தி என்னும் கையைக் கொண்டு கடையும்போது, 'ஞானம் ஆகிய அமிர்தம்' வெளிப்படும். எனவே, இந்நூல் 'ஞானாமிர்தம்' எனப்பட்டது.

உடல்வேறு - ஆன்மா வேறு என்னும் கருத்தை இந்நூல் விளக்கும் முறை, புதுமையாக இருக்கிறது. அது வருமாறு.

நாம் உண்ணும் உணவில் இரண்டு பங்கு உடலோடு சேர்ந்து அதனை வளர்க்கிறது. ஒரு பங்கு மலமாகக்கழிகிறது. நீ அந்த மலம் இல்லை. என்பதை உடனே ஒப்புக்கொள்கிறாய்; அப்படியானால் அந்த இரண்டு பங்கான உடலும் நீ இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும் அன்றோ ?

இவ்வுண்மையைத் "தேர் ஆதி வாகனங்களில் வைத்துத் தேகி உண்மை" கூறலில் தெளிவுபடுத்துகிறார்.

'ஆணவமல உண்மை' பற்றி வாகீசமுனிவர் கூறுவது வருமாறு:

ஆன்மாவாகிய நீ அறிவுடையவன்; இந்திரியங்கள் அறிவற்றவை. அறிவுடையவனாகிய நீ அறிவற்ற இந்திரியங்களுக்கு அடிமைப் பட்டு ஏவல் செய்கிறாய்; ஆதலால், உன் அறிவை விளங்கவிடாமல்



மறைக்கின்ற ஏதோ ஒரு பொருள் இருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. அப்பொருள் உனக்கு அறியாமையைச் செய்வதால் பேரறிவுடைய இறைவன் அதனை உண்டாக்கி இருக்கமாட்டான். எனவே அஃது என்றும் உள்ள அநாதிப் பொருளே ஆகும். அப்பொருளே ஆணவமலம் எனப்படும்.

இவ்வுண்மையை 'ஆணவமலம்' என்னும் தலைப்பில் விவரிக்கிறார்.

பல்லாற்றானும் சைவசித்தாந்தக் கொள்கைகளைச் சிறப்பாக விளக்கிக்கூறும், ஞானாமிர்தம், இறைவனின் கிரியாசக்தி அறிவற்றது என்று ஓரிடத்தில் குறிப்பிடுகிறது. இதனை வாகீசமுனிவர், 'பஞ்சக்கிருத்தியபதி அவிகாரி' என்னும் தலைப்பில் வரும் (63)-ஆவது அகவலில்,

> "காரியத்து இசைந்த பேர் இசைப் பெருவலி
> அறிவு இன்று அறிவதை ஒத்து. பிறிவுஇன்று
> இருந்தொழில் இலது" (41 - 43)

என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து இதனை அறியலாம்.

வாகீச முனிவரின் இக்கருத்தை மறுத்துச் சிவஞானபாடியம் இரண்டாம் சூத்திரம் இரண்டாம் அதிகரணத்தில், 'முதற்காரண முடிவு' என்னும் தலைப்பின் கீழ்,

> "தாதான்மியசத்தி 'சித்து' ஆவது அன்றிச் சடம் ஆதல்
> பொருந்தாமையானும், 'கிரியாசத்தி' ஞானசத்தியின் வேறு
> அன்மையானும் "ஞானமே ஆனபோது" (சித். 85) என்று
> ஓதியது ... ... ... பற்றி அது பொருந்தாது என மறுக்க"

என்று சிவஞான சுவாமிகள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

ஒருவேளை, இக்கருத்து வேறுபாடு பற்றி, இந்நூல் பதினான்கனுள் ஒன்றாகச் சேர்க்கப்படாமல் இருந்திருக்கலாமோ என்று எண்ணும்படியாக உள்ளது.

ஆயினும், இந்நூலில் பல சைவசித்தாந்தக் கொள்கைகள் விரிவாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளதால், இதனைச் சித்தாந்திகள் ஒவ்வொருவரும் கற்க வேண்டுவது இன்றியமையாத தாகும்.

இந்நூலுக்கு ஔவை. துரைசாமிப்பிள்ளை அவர்கள் உரையைத் தழுவி, திரு. அம்பை, இரா சங்கரனார் அவர்கள் அரியதோர் உரை எழுதியிருக்கிறார்கள். 1984ல் இது கழக வெளியீடாக வந்துள்ளது. இவ்வுரைக்கு, மலேசியா, சித்தாந்த வித்தகர். திரு. முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் அவர்கள் ஓர் அணிந்துரை எழுதியிருக்கிறார்கள். அவ்வணிந்துரையில், சித்தாந்த நுட்பங்கள் பலவற்றை சைவ சித்தாந்த வித்தகர் அவர்கள் தமக்கே உரிய எளிய நடையில் தெரிவித்துள்ளார்கள்.

இந்நூல் மெய்கண்ட சாத்திரங்களுக்கு முற்பட்ட காலத்ததாக இருப்பதால். சிவாகமச் செய்திகள் பலவற்றை இதன்கண் காணலாம்.

**திருவுந்தியார் மற்றும் திருக்களிற்றுப்படியார் :**

திருவாசகத்தில் இருபது தாழிசைகளைக் கொண்டுவருப் திருவுந்தியார் போலவே, இந்நூல் நாற்பத்து ஐந்து கலித்தாழிசைகளைக் கொண்டு அமைந்துள்ளது. இந்நூலாசிரியர், 'திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார்' ஆவார்; இவரது மாணவர் ஆளுடைய தேவநாயனார், அவருடைய மாணவர் திருக்கடவூர் உய்ய வந்த தேவநாயனார். ஆவார். இவர் 'திருக்களிற்றுப் படியார்' என்னும் நூலைச் செய்துள்ளார். இந்நூல் நூறு வெண்பாக்களால் அமைக்கப் பெற்றுள்ளது.

திருவுந்தியாருக்குச் செய்யுள் வடிவில் அமைந்த உரையாகத் திருக்களிற்றுப்படியார் இலங்குகின்றது. எனவே, இவ்விரு நூல்களையும் ஒருங்கே வைத்துக் கற்பதுநல்லது. இவ்வுண்மையைக் கருத்திற் கொண்டே' திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் "திருவுந்தியார் திருக்களிற்றுப்படியார் - விளக்கவுரை" என்ற ஒரு நூலை 1982 ல் வெளியிட்டுள்ளது. இவ்வெளியீட்டு உரையைச் செம்புலச் செல்வர் க. வெள்ளைவாரணனார் அவர்கள் இனிய தமிழ் நடையில் எழுதியுள்ளார்கள்.

உய்யவந்த தேவ நாயனார் குரு பரம்பரையில் வந்த இவ்விரு நூல்களும் வீடு பேறு பெறுதற்குப் பல சாதனங்களைக் கூறுகின்றன.

இந்நூல்களில் உள்ள நுண் கருத்துக்கள் சில வருமாறு :

திருவுந்தியாரில் வரும் 'உந்திபற' என்பதற்குப் பொருள், "உம் தீ பற" என்று பிரிக்கப்பட்டு, உம்முடைய தீமைகள் எல்லாம் பறந்து போகக் கடவது' என்பதாகும். திருவாசகத்தில் வரும் திருவுந்தி



யாரிலும் இவ்வாறே பொருள் கூறப்படுகிறது. 'உந்திபறத்தல், என்பது இளமகளிர் விளையாடும் விளையாட்டு வகைகளில் ஒன்று ஆகும்.

யாவராலும் அறிய இயலாத சிவபெருமான், நாம் உய்யும் பொருட்டுத் திருமேனி கொண்டு, குருவடிவாய் எழுந்தருளிய சிறப்பைத் திருவுந்தியாரின் முதற்பாட்டு அருள்கின்றது.

*" அகளமாய் யாரும் அறிவரிது அப்பொருள்*
*சகளமாய் வந்ததுஎன்று உந்தீபற;*
*தானாகத் தந்ததுஎன்று உந்தீபற "*

உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் தாயாகவும் தந்தையாகவும் இருப்பவன் சிவபெருமான் ஒருவனே. அனைத்து உயிர்களையும் உலகங்களையும் கடந்து சொரூபநிலையில் இருக்கும் அவனே. ஒவ்வொரு உயிரிலும் பொருளிலும் கலந்து தடத்த நிலையிலும் நிற்கிறான் என்ற சைவசித்தாந்தப் பேருண்மையைத் திருக்களிற்றுப்படியாரின் முதற்பர்ட்டு அருளிச் செய்கின்றது.

*" அம்மையப்ப ரே, உலகுக்கு அம்மையப்பர் என்றுஅறிக;*
*அம்மையப்பர் அப்பரிசே வந்துஅளிப்பர் - அம்மையப்பர்*
*எல்லா உலகுக்கும் அப்புறத்தார்; இப்புறத்தும்*
*அல்லார்போல் நிற்பர் அவர் "*

இந்நூல்களில், பன்னிரு திருமுறைகளில் உள்ள சொற்களுக்குப் பொருள் காணும் முறை சிறப்பாக அமைந்துள்ளது. சைவ சமயக்குரவர் நால்வரின் வரலாற்று நிகழ்ச்சிகளும், கண்ணப்பர், சண்டேசர் போன்ற திருத்தொண்டர்களின் அருளிச் செயல்களும் இந்நூல்களில் இடம் பெற்றுள்ளன சைவசமயக் கொள்கைகளை எடுத்தியம்பும் தமிழ்மறையாகிய திருக்குறளில் உள்ள பாக்கள் ஆங்காங்கே இந்நூல்களில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இந்நூலுக்குப் பல உரைகள் உள்ளன. அவற்றுள் முக்கியமான சில வருமாறு.

1. திருவாவடுதுறை ஆதீனத்துத் தில்லைச்சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசத் தம்பிரான் சுவாமிகள் விரிவுரை.

2. க. வச்சரவேல் முதலியாரவர்கள் ( சைவசித்தாந்தப் பெருமன்ற உரை )

3. காஞ்சிபுரம், ஆலால சுந்தரம் பிள்ளையவர்கள் உரை.

திருக்களிற்றுப்படியாரில் உள்ள ஏழாவது வெண்பாவின் முதலிரு அடிகளில், நமக்குற்ற எல்லாத் தீங்கையும் நீக்குவது **திருநீறு ஒன்றே** ஆகும் என்று வருகிறது. அது வருமாறு.

*'' இன்று பசுவின் மலம்அன்றே இவ்வுலகில்*
*நின்ற மலம்அனைத்தும் நீக்குவதுஇங்கு ''*

இதனைப் படிக்கும்போது, திருநீறு ஒன்று அணிந்தாலே போதும்; வேறு அணி எதற்கு என்று எண்ணத் தோன்றுகிறது.

இதுபோன்று பல நுட்பமான செய்திகளை இவ்விரு நூல்களும் எடுத்தியம்புகின்றன.

இவ்விரு நூல்களும் மெய்கண்ட சந்தானத்திற்கு முந்திய மரபைச் சேர்ந்தன என்றாலும், பதினான்கனுள் முதலிரண்டு சாத்திரங்களாக சேர்க்கப்பட்டிருப்பது பெருமைப்படத்தக்கதே ஆகும்.

**சிவஞானபோதம் :**

சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களை உடையது. முதல் ஆறு சூத்திரங்களும் 'பொது அதிகாரம்' எனப்படும்; பின் ஆறும் 'உண்மை அதிகாரம்' எனப்படும். இந்நூல் நான்கு இயல்களைக் கொண்டது. அவை, பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல் பயன் இயல் என வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு இயலும் மூன்று சூத்திரங்களை உடையது.

சைவசித்தாந்தம் கொள்ளும் இறை. உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மையை பிரமாண இயல் பேசுகின்றது. அந்த முப் பொருள்களின் இயல்பை, இலக்கண இயல் இயம்புகின்றது. அடுத் துள்ள சாதன இயலில் உள்ள மூன்று சூத்திரங்களும், உயிர்கள் இறைவனை அடைதற்குரிய நெறிமுறைகளைக் கூறுகின்றன. இறுதியில் இடம் பெறும் பயன் இயல், அவ்வாறு சாதன முறையில் நின்ற உயிர்கள் பெறும் பயன்களைக் கூறுகின்றது.

பன்னிரு சூத்திரங்கள் மட்டுமல்லாமல், ஒவ்வொரு சூத்திரமும் பல அதிகரணங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு அதிகரணத்திற்கும் மேற்கோள், ஏது, உதாரண வெண்பா என்று உள்ளன; இவ்வாறு விரிவான நுட்பங்கள் பல அமைந்த ஒரு நூலாக இஃது உள்ளது.



**மெய்கண்டார் :**

இத்தகு அரிய நூலை அருளிச் செய்தவர் மெய்கண்டார் என்பவர் ஆவார். இவருக்கு இவருடைய பெற்றோர் இட்ட பெயர் '' சுவேதனப் பெருமாள் '' என்பதாகும்.

மெய்கண்டார், திருமுனைப்பாடி நாடு என்னும் நடுநாட்டில், ' திருப்பெண்ணாகடம் ' என்னும் திருத்தலத்தில் அவதரித்தார். இத்தலத்தில் பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில் தோன்றிய அச்சுதகளப்பாளர் இவரது தந்தையார் ஆவார்.

அச்சுத களப்பாளருக்கு மகப்பேறு இல்லாத குறை இருந்தது. அவரது குல குருவாகிய திருத்துறையூர் சகலாசம பண்டிதர் என்னும் அருணந்தி சிவாச்சாரியாரை அணுகி அது குறித்து அவர் முன் விண்ணப்பித்தார்.

அருணந்திசிவம் தேவாரத் திருமுறைகள் எழுதிய ஏட்டுச் சுவடியை கொண்டு வரச் செய்து, சிவபெருமானைச் சிந்தித்து, அந்தச் சுவடியில் கயிறு சாத்திப் பார்த்தார். அப்போது,

*' பேய்அடையா பிரிவுஎய்தும்: பிள்ளையினோடு உள்ள நினைவு*
*ஆயினவே வரம்பெறுவர்; ஐயுற வேண்டா ஒன்றும்;*
*வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்*
*தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே ''*

என்னும் திருஞானசம்பந்தப் பெருமான் திருப்பாட்டு எழுதப்பட்ட ஏடு வெளிப்பட்டது. அதனைக் கண்டு மகிழ்ந்து, சிவபெருமான் திருவருளை நினைந்து, தம் மாணவர் ஆகிய அச்சுதகளப்பாளரை அழைத்து,

'' திருவெண்காடு சென்று அங்குள்ள முக்குளங்களில் மூழ்கி சிவபெருமானை வழிபட்டு வந்தால், அவனருளால் சிறந்த ஆண்மகவைப் பெறுவாய் '' என்று அருளிச்செய்தார்.

அச்சுதகளப்பாளர், தம் ஆசிரியரின் திருவடிகளில் விழுந்து வணங்கி, விடைபெற்றுக் கொண்டு, தம் மனைவியுடன் திருவெண் காடு சென்று, திருமுறை வாக்கின்படி நடந்தார்.

ஒரு நாள் இரவில், திருவெண்காட்டு இறைவன், அச்சுதகளப் பாளர் கனவில் தோன்றி.

" அச்சுதகளப்பாளரே, திருஞானசம்பந்தரின் பாடலின் உறைப்புக் கொண்டு, நம்மை வந்தடைந்து நீ வழிபாடு செய்தாய்; திருஞானசம்பந்தர் கூறியருளிய அனைத்தும், நாமே அவர் திருவாக்கில் நின்று உரைத்தன ஆகும்; எனவே, உனக்குத் திருஞானசம்பந்தரைப் போன்று ஓர் ஆண் மகப் பேறு ஏற்படும் " என்று அருளிச் செய்தான். அச்சுதக்களப்பாளர் அதனைத் தம் மனைவியிடம் கூறி மகிழ்ந்தார். சில நாட்களில் அச்சுதக்களப்பாளரின் அருமை மனைவியார் திருவயிறு வாய்க்கப் பெற்றார்.

உரிய நாளில் ஒரு நல் ஓரையில், வேத சிவாகமங்களின் வழி நிற்பவர்கள் தழைக்கவும், சுத்தாத்துவித சித்தாந்த சைவம் செழிக்கவும், ஞானசூரியனாகிய 'மெய்கண்டார்' திரு அவதாரம் செய்தார். அவருக்குத் திருவெண்காட்டு இறைவன் திருப்பெயர் ஆகிய 'சுவேதவனப் பெருமாள்' என்னும் திருநாமம் சூட்டிப் பெற்றோரும் மற்றோரும் மகிழ்ந்தனர்.

சுவேதவனப் பெருமாளின் தாய் மாமனார் திருவெண்ணெய் நல்லூரில் உள்ள தம் இல்லத்திற்குக் குழந்தையை அழைத்துச் சென்று வளர்த்து வந்தார். இரண்டாண்டுகள் நிரம்பிய நிலையில் குழந்தை, தெருவில் சிறுதேர் உருட்டி விளையாடிக் கொண்டிருந்தது.

அப்போது, திருக்கயிலையிலிருந்து தென்பகுதியில் உள்ள திருக்குற்றாலத்திற்கு அருகில் உள்ள பொதியமலையை நோக்கி, வான வீதியில் வந்து கொண்டிருந்தார் பரஞ்சோதி முனிவர். அகச்சந்தான குரவர்கள் நால்வருள், நான்காவது குரவராகிய இவரது விமானம், திருவெண்ணெய்நல்லூருக்கு மேலே வந்ததும் நின்றுவிட்டது. அதன் காரணத்தைத் திருவருட் குறிப்பால் உணர்ந்த பரஞ்சோதி முனிவர், விமானத்தைவிட்டுக் கீழ் இறங்கி வந்து, சுவேதனப் பெருமாளின் திருவருள் திறத்தை அறிந்து குழந்தைக்கு முறைப்படி சிவதீட்சை செய்து, "மெய்கண்டசிவம்" என்னும் தீட்சாநாமம் சூட்டிச் 'சிவஞானபோதம்' என்னும் பேரருள் நூலின் நுண்பொருளை உபதேசித்து அருளினார்.

அவ்வருள் உபதேசம் பெற்ற மெய்கண்ட சிவனார், சிவஞானபோதம் என்னும் அரும் பெறல் நூலைச் செழுந்தமிழ் மொழியில் செய்தருளினார். திருவெண்ணெய் நல்லூரில் உள்ள திருவருட்டுறையில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப் பிள்ளையாரின் நல்லருள்



பெற்றுச் சிவஞான போதத்திற்கு 'வார்த்திகம்' ஆகிய பொழிப்புரையினையும் செய்தருளினார்.

தம்மிடம் வந்து கேட்கும் அன்பர்களுக்குச் சிவஞானபோத நூலில் உள்ள நுண்பொருளை விளக்கிக் கூறினார் மெய்கண்டசிவம். இதனை அறிந்த, அச்சுதகளப்பாளரின் குல குருவாகிய திருத்துறையூர்ச் சகலாகம பண்டிதர், குழந்தையை நேரில் காணும் பொருட்டுத் திருவெண்ணெய் நல்லூருக்கு வந்தார்.

ஊர் மக்கள் அனைவரும், சகலாகம பண்டிதர் தங்கியிருந்த திருமடத்திற்குச் சென்று அவரை வணங்கி வழிபட்டனர். சகலாகம பண்டிதரை எதிர் நோக்கியிருந்த மெய்கண்ட சிவம், அந்தத் திருமடத்திற்குச் செல்லவில்லை, எனவே, மெய்கண்டசிவம் எழுந்தருளியிருக்கும் இடந்தேடி, சகலாகம பண்டிதர் சென்றார். அப்போது மெய்கண்டார். தம்மைச் சுற்றியிருந்த மாணவர்களுக்கு ஆணவ மலத்தின் இலக்கணத்தை உபதேசித்துக் கொண்டிருந்தார்.

அந்நிலையில் அங்கு வந்த சகலாகமபண்டிதர், மெய்கண்ட சிவத்தை நோக்கி, " ஆணவமலத்தின் வடிவம் யாது ? " என்று மிடுக்கோடு, நின்றுகொண்டே கேட்டார். அதனைக் கேட்ட மெய்கண்ட சிவம், வாயால் விடை கூறுமல், தமது ஆள்காட்டி விரலால் சகலாகம பண்டிதரைச் சுட்டிக் காட்டினார். அருட்குரவராகிய மெய்கண்ட சிவத்தின் திருநோக்கினால், சகல ஆகமங்களையும் பழுதறப் பயின்ற அப் பெருந்தகையாருக்குப் பரஞானம் கைவரப் பெற்றது; உடனே மெய்கண்ட சிவனாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார்; அவருக்குச் சிவதீட்சை அருளி, அவரது நெற்றியில் திருநீறு அணிவித்து, அவருக்கு 'அருணந்திசிவம்' என்னும் தீட்சா நாமத்தைச் சூட்டினார். மெய்கண்டசிவம்' அதன் பின்பு சிவஞானபோதப் பொருள் நுட்பத்தை அவருக்குப் போதித்து, அவரைத் தம் முதல் மாணவராக ஏற்றுக் கொண்டார்.

அருணந்திசிவத்துடன் திருவதிகை மனவாசகங்கடந்தார்; சிற்றம்பல நாடிகள் முதலிய நாற்பத்தொன்பது மாணவர்களுக்கு மெய்கண்ட சிவம் சிவதீட்சை செய்வித்தருளிச் சிவஞானபோதப் பொருளை உபதேசித்தருளினார்.

தம்மை வந்தடைந்த மாணவர்கட்குச் சிவஞானபோத நுண்பொருள்களைப் போதித்துச் சில காலம் இப்பூவுலகில் வாழ்ந்த

மெய்கண்ட சிவனார், ஐப்பசி மாதம் சுவாதி நட்சத்திரத்தில் ஒருநாள் சுத்த அத்துவித முத்தி ஆகிய சிவசாயுச்சியத்தை அடைந்தார்.

மெய்கண்டாரைக் குறித்துத் தாயுமானவர்,

*" பொய்கண்டார் காணாப் புனிதம்எனும் அத்துவைத*
*மெய்கண்ட நாதன்அருள் மேவுநாள் எந்நாளோ "*

( 45 - 2 - 4 )

என்றருளிச் செய்துள்ளது. இங்கு நினைவு கூர்தற்குரியது.

மெய்கண்டாரின் காலம் கி. பி. 1232 என்று முன்பே கூறப்பட்டது. சிவஞானபோதத்தை "இரௌரவ ஆகமத்தில் எழுந்த சிவஞானபோத" நூலினைத் தமிழ் உலகம் உய்தல் பொருட்டு, மொழிபெயர்த்துச் செய்தார் மெய்கண்டார்" என்று சிவஞான பாடியத்து மங்கலவாழ்த்துத் தொடக்கத்தில் சிவஞான சுவாமிகள் கூறியுள்ளார்கள்.

இரௌரவ ஆகமத்தின் கையெழுத்துப்படிகள் இப்போது கிடைத்துள்ளன. அவற்றில் வடமொழி சிவஞானபோதம் காணப்படவில்லை. அவ்வாறாயின் சிவஞானசுவாமிகள் அவ்வாறு கூறியதற்கு என்ன காரணம் என்னும் தடை சைவ உலகத்தை விட்டு இன்னும் நீங்கினபாடில்லை. இத்தடைக்குத் தக்கதோர் விடையளிக்கும் வகையில் "சைவ சமயத் தோற்றமும் வளர்ச்சியும்" என்னும் நூலின் பக்கம் (100)ல் டாக்டர் திரு. டி. பி. சித்தலிங்கம் அவர்கள் விளக்கியுள்ள கருத்து, அமைதி கொள்ளும் வகையில் அமைந்துள்ளது. அது வருமாறு :

" சிவஞான போதத்தின் கருத்துக்களை வடமொழி உலகிற்கு எடுத்துக் காட்டியவர், அதனை மொழிப் பெயர்த்து, அதற்குச் சிறப்பிடம் தருவதற்காக இரௌரவ ஆகமத்தில் பாசமோசனப் படலத்தில் ஒரு பகுதி என்று குறிப்பிட்டிருக்கலாம். இக்கருத்து வலுவடைந்து சிவாக்கிர யோகிகள் அதனை அப்படியே ஏற்றுக் கொள்ளப் பட்டிருக்கலாம். எனவே, சிவாக்கிர யோகிகள், அதனை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கலாம். பின்வந்தோரும் ( சிவஞானசுவாமிகளும் ) அதனைப் பின்பற்றி இருக்கலாம். எனவே சிவஞான போதம் தமிழ் முதல் நூலே ஆகும் "

இஃது எவ்வாறு இருப்பினும், சிவஞான சுவாமிகள் திருவாவடுதுறை ஆதினத்தின் 'குல தெய்வம்' எனக் கருதப்படுவதால்,



சிவஞானபோதம் வடமொழி போதத்தின் மொழிபெயர்ப்பு என்பதே திருவாவடுதுறை ஆதீனக் கொள்கையாக இன்று வரை கொள்ளப் படுகிறது.

**சிவஞான சித்தியார் :**

சிவஞான போதத்தைப் போலவே இதுவும் பன்னிரண்டு சூத்திரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. சிவஞான போதத்திற்குச் செய்யுள் வடிவில் அமைந்துள்ள ஓர் அரிய உரைநூலாக சிவஞானசித்தியார் விளங்குகிறது இது பரபக்கம், சுபக்கம் என்று இரு பகுதிகளாக உள்ளது. பரபக்கம் பிற சமயக் கருத்துக்களைக் கூறி அவற்றைக் காரண காரிய இயைபுபடுத்தி மறுக்கிறது. இப்பரபக்கத்தில் ( 301 ) விருத்தப்பாக்கள் உள்ளன.

சிவஞானசித்தியார் – சுபக்கம், அரிய பெரிய சைவசித்தாந்த நுண்பொருள்களை விளக்கிக் கூறுகின்றது. இந்நூலாசிரியர் சிவாகமங்களைக் கற்றவர் ஆகலின், சிவாகமக் கருத்துக்கள் பல இதன்கண் மிளிர்கின்றன. இதில் உள்ள அளவை இயல் மிகவும் அருமையானது. தருக்கநூல் கற்க விரும்புபவர்கள் இந்த அளவை இயலைக் கற்க வேண்டுவது, இன்றியமையாதது ஆகும். இந்நூலின் சிறப்பைக் குரு ஞானசம்பந்தர்,

*" பாரிலுள்ள நூல்கள் எல்லாம் பார்த்து அறிடச் சித்தியிலே*
*ஓர்விருத்தப் பாதிபோ தும் "*

என்று கூறியருளியுள்ளார். தாயுமானவரும்,

*" பாதி விருத்தத்தால், இந்தப் பார் விருத்தமாக*
*உண்மை சாதித்தார் "*

என்று இந்நூலின் பெருமை பற்றிப் பேசுகின்றார்.

சைவசித்தாந்தக் கொள்கைகளில் தொண்ணூற்று ஐந்து விழுக்காடு சிவஞானசித்தியாரிலே உள்ளன. எனவேதான்,

*" சிவனுக்கு மிஞ்சிய தெய்வமும் இல்லை*
*சித்தியாருக்கு மிஞ்சிய சாத்திரமும் இல்லை "*

என்று ஒரு பழமொழி எழுந்தது போலும்.

இந்நூலுக்கு பலர் உரை எழுதியுள்ளனர்; அவற்றுள் அறுவர் உரை குறிப்பிடத்தக்கது. அவை வருமாறு.

1. சுவாமி ஞானப்பிரகாசர் உரை,
2. வெள்ளியம்பலத் தம்பிரான் சுவாமிகள் உரை,
3. நிரம்பிய அழகிய தேசிகர் உரை,
4. மறைஞான தேசிகர் உரை,
5. சிவாக்கிர யோகிகள் உரை
6. சிவஞான சுவாமிகள் உரை

சிவஞானசுவாமிகள் உரையைத் தழுவி சுப்பிரமணிய தேசிகர் உரை ஒன்றும், தூத்துக்குடி பொ. முத்தையாபிள்ளை அவர்கள் உரை ஒன்றும் உள்ளன. யாழ்ப்பாணம் திருவிளங்கம்பிள்ளை பதவுரை ஒன்றும் உள்ளது. அறுவர் உரைகளையும் ஆய்வு செய்து, டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி அவர்கள் எழுதிய ஆங்கில உரை ஒன்றினைச் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது.

இவ்வுரைகள் அனைத்திலும் சிவஞானசுவாமிகள் எழுதிய பொழிப்புரையைத் தழுவித் தூத்துக்குடி, பொ. முத்தையாபிள்ளை அவர்கள் எழுதிய உரை சாலச் சிறந்தது என்பது அறிஞர்கள் கருத்து.

அருணந்திசிவம் அருளிய மற்றொரு நூல் 'இருபா இருபஃது' ஆகும். இஃது இருபது செய்யுள்களால் ஆயது. மெய்கண்ட சிவத்தைச் சிவபெருமானாகக் கருதிச் செய்துள்ள இந்நூலில், பல அரிய சைவசித்தாந்த நுட்பங்களைக் கூறுகின்றார். சிவஞான சித்தியாரில் காணப்படாத சில சிந்தனைகள், இந்நூலில் தடைகளாக எழுப்பப்பட்டு, அடுத்தடுத்து வரும் தடைகளில் அதற்கு விடைகளை உள்ளடக்கி இதனை அமைத்திருக்கும் அருமை கற்று இன்புறத் தக்கது.

இந்நூலுக்குத் திருவாவடுதுறை ஆதீனத் திருமடத்து நமச்சிவாயத் தம்பிரான் உரை ஒன்றும் சீர்காழித் தத்துவராயர் உரை ஒன்றும் உள்ளன.



**அருணந்தி சிவம் :**

மெய்கண்ட சிவத்தின் முதல் மாணவர் ஆகிய அருணந்தி சிவம் ஆதிசைவர் குலத்தில் திருத்துறையூரில் தோன்றியவர்; வேதங்களையும், திருமுறைகளையும், ஆகமங்களையும், முழுமையாகக் கற்றுத் துறைபோனவர். எனவே 'சகலாகம பண்டிதர்' என்று போற்றப்படுகிறார். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர், சதாசிவ சிவாசாரியார் என்பதாகும்.

மெய்கண்டாரின் தந்தையாகிய அச்சுதகளப்பாளருக்குக் குல குருவாக இருந்தவர்; மெய்கண்டாரின் சிவஞானபோத நூலை 'முதல் நூல்' ஆகக் கொண்டு, அதற்கு 'வழிநூல்' ஆகச் சிவஞான சித்தியார் அருளிச் செய்தார். சைவ உலகத்திற்கு இவர் செய்திருக்கும் ஞானப் பேருதவி பெரிதும் போற்றுதற்குரியதாகும்.

இவரிடம் மறைஞானசம்பந்தர் மற்றும் பல மாணவர்கள் அருகிருந்து பாடம் கேட்டவர்கள் ஆவர். இவரது தலை மாணாக்கர் ஆகிய மறைஞான சம்பந்தர் நூல் ஏதும் செய்யவில்லை. தம்மை வந்து அடைந்தவர்களுக்கு அருளுபதேசம் செய்து வந்த அருணந்தி சிவம் ஒரு புரட்டாசி மாதத்துப் பூரம் நட்சத்திரத்தில் சுத்த அத்துவித முத்தி ஆகிய சிவசாயுச்சியத்தைப் பெற்றுள்ளார்.

**உண்மை விளக்கம் :**

மெய்கண்டாரின் மற்றொரு மாணவர் ஆகிய திருவதிகை மனவாசகங்கடந்தார் அருளிச் செய்த நூல் "உண்மை விளக்கம்" என்பதாகும். இஃது ஐம்பத்து மூன்று வெண்பாக்களால் ஆயது. இதனுள், முப்பத்தாறு தத்துவம், ஆணவ மலம், இருவினை, உயிர் இறைவனின் திருநடனம், ஐந்தெழுத்து அருள்நிலை, பரமுத்தி நிலை, அணைந்தோர் தன்மை என்பவை சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வகையில், மிக அழகாகக் கூறப்பட்டுள்ளன. அந்நூல் வினா – விடையில் அமைந்துள்ளது. எனவே, சைவ சித்தாந்தத்தைச் சாத்திர வாயிலாகப் பயில விருப்புபவர்கள் இந்நூலை முதலில் ஓதிப் பின்பு மற்றவற்றை ஓதினால், பொருள்களை விளங்கிக்கொள்வது எளிதாக இருக்கும்.

**சிவப்பிரகாசம் :**

மறைஞான சம்பந்தரின் மாணவர், உமாபதி சிவசாரியாரால் அருளிச் செய்யப்பட்ட இந்நூல், சிவஞானபோதத்தின் 'சார்பு நூல்' எனப்படும்.

இந்நூல் நூறு திருவிருத்தங்களால் ஆயது. பாயிரம், பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்னும் மூன்று பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. பாயிரத்தின் ஐந்தாவது பாடலில், திருக்கயிலாய பரம்பரையில் வந்த சந்தான குரவர்கள் இன்னார் என்பது தெளிவு படுத்தப்பட்டுள்ளது. சீகண்ட பரமேஸ்வரன் கயிலையம்பதியாக இருந்து, சிவாகமங்களை ஓதியருளியது. அகச்சந்தான குரவர்கள் வாயிலாக அவற்றை நாம் பெற்றது முதலிய செய்திகளை இப்பாடல் அறிவுறுத்துகின்றது.

சிவாகமங்களின் பிழிவாகவே சைவசித்தாந்தம் உள்ளது என்பதை, அருணந்தி சிவம் அருளிய, " சிவாகமங்கள் சித்தாந்த மாகும் " என்னும் (267) வாக்கால் அறியலாம். "சைவ" என்ற அடைமொழியைச் சேர்த்து, " சைவசித்தாந்தம் " என்ற சொல்லாட்சியை முதன் முதல் உமாபதிசிவமே ஆள்கிறார். சிவப்பிர காசத்தின் (7)-ஆவது பாடலில், " வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன் " என உமாபதிசிவம் குறிப்பிடுவதிலிருந்து இவ்வுண்மை புலப்படும். சிவப்பிரகாசத்தில் பல அரிய சைவசித்தாந்த நுட்பங்கள் உள்ளன.

சிவப்பிரகாசத்திற்குப் பல உரைகள் உள்ளன. அவற்றுள் திருவாவடுதுறை ஆதீனத்து தே. ஆ. சீனிவாசாசாரியார் மற்றும் த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை ஆகியோர் எழுதிய உரைகளும் இலங்கை மு. திருவிளங்க முதலியார், முத்து சு. மாணிக்க வாசக முதலியார் அவர்கள் எழுதிய உரையும் குறிப்பிடத்தக்கன.

சிவப்பிரகாசம் முதலிய எட்டு நூல்கள் உமாபதிசிவாசாரியாரால் அருளப் பட்டவையாகும். இவற்றைச் ' சித்தாந்த அட்டகம் ' எனக் கூறுவர்.

**திருவருட்பயன் :**

திருக்குறளைப் போன்று பத்துப் பத்துக் குறள் வெண் பாக்களைக் கொண்ட பத்து அதிகாரங்களாலாகிய நூல். திருவள்ளுவர் செய்த திருக்குறளில் 'அறம்' 'பொருள்' 'இன்பம்' என்னும் மூன்று மறைகள் உள்ளன. இந்தத் திருவருட்பயன், நான்காவது மறையாகிய 'வீடு' பற்றிப் பேசுகின்றது. எனவே, இதனைத் திருக்குறளுக்கு ஒரு புறனடையாகவும் கொள்ளலாம்



திருவருட்பயனில் இறை உயிர் மலம் ஆகியவற்றின் இயல்புகள் நகைச்சுவைக் குறிப்புடன் கூறப்பட்டுள்ளன. 'அஞ்செழுத்தருள் நிலை' என்ற அதிகாரம், திருவைந்தெழுத்து பற்றித் தெளிவாகப் பேசுகின்றது.

இந்நூலுக்கும் பல உரைகள் உள்ளன. அவற்றுள் யாழ்ப்பாணம் சிவபாதசுந்தரம் உரை சிறப்பானது.

**வினா வெண்பா :**

பதின்மூன்று வெண்பாக்களைக் கொண்டது இந்நூல், சைவசித் தாந்தக் கொள்கைகளைப் புரிந்து கொள்வதில் ஏற்படும் சிக்கல்கள் சிலவற்றை இந்நூலில் வினாக்களாகத் தொடுத்து விளக்குகின்றார் உமாபதிசிவம். அருணந்திசிவம் அருளிச் செய்த 'இருபா இருபஃது' என்னும் நூலோடு இந்நூலை ஒப்பிட்டுக் கூறலாம், இதற்குத் திருவாவடுதுறை ஆதீன தே. ஆ. ஸ்ரீனிவாசாசாரியர் எழுதிய உரை ஒன்று உள்ளது. திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த நமச்சிவாயத் தம்பிரான் எழுதிய உரையும் உள்ளது.

**போற்றிப் பஃறொடை :**

தொண்ணூற்றைந்து கண்ணிகளையும் ஒரு வெண்பாவையும் உடைய இந்நூல், உயிர்க்கு முதன் முதலில் எப்படிப் பிறப்பு ஏற்பட்டது என்ற செய்தியினை இந்நூலிலிருந்தே பெற முடிகிறது. இறைவன் உயிர்க்கு என்னென்ன பேருதவிகளைச் செய்கிறான் என்பதை இந்நூல் தெளிவாகக் கூறுகிறது. தம்குருநாதர் மறைஞான சம்பந்தரின் அருட்கொடையாகவே இந்நூலை உமாபதிசிவம் கூறுகிறார், சைவசித்தாந்தப் பெருமன்றப் பதிப்பில் (1940) ஓருரை உள்ளது. அவ்வுரையாரால் எழுதப்பட்டது என்று புலப்படவில்லை திருவாவடுதுறை ஆதீனத்து நமச்சிவாயத் தம்பிரான் இதற்கு உரை செய்திருப்பதாக த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் கூறு கிறார்கள்,

**கொடிக்கவி :**

இந்நூலில் நான்கு பாடல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று கட்டளைக் கலித்துறையிலும் மற்றவை வெண்பா யாப்பிலும் உள்ளன. இந்நூலில் திருவைந்தெழுத்தின் பல்வேறு நிலைகள் குறித்துப் பேசப்படுகின்றது. முதல் செய்யுளில்.

" ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே இடம் "

என்று கூறப்பட்டிருக்கும் கருத்து, அரிய சைவசித்தாந்த

நுட்பத்தைக் கூறுகிறது, கோயில்களில் கொடி ஏறும் தத்துவத்தை இந்நூல் விளக்குகிறது. சைவ சித்தாந்தப் பெருமன்றப் பதிப்பில் ( 1940 ) ஒருரை உள்ளது. அதனை எழுதியவர் யார் என்பது தெரியவில்லை.

**நெஞ்சுவிடு தூது :**

**கலிவெண்பா** யாப்பில் அமைந்த ( 129 ) கண்ணிகளையும் ஒரு வெண்பாவையும் உடையது இந்நூல், தொண்ணூற்று ஆறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றான தூது முறையில் அமைந்துள்ளது. தம் குருநாதர் மறைஞானசம்பந்தரை சிவன் எனவே கருதி உமாபதி சிவம் இந்நூலைச் செய்துள்ளார். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள் இந்நூலில்தான், இறைவன் எண்குணத்தான் என்னும் செய்தி காணப்படுகிறது. அது வருமாறு.

> ''விறல் சொல்லுக்கு
> எட்டானை யார்க்கும் எழுதா இயற்குணங்கள்
> எட்டானை '' (100)

என்றும் இந்நூலில்,

> '' தாம் பிரமம் கண்டவர்போல் தம்மைக்கண்டு ஆங்கு அதுவே
> நான் பிரமம் என்பவர் பால் நண்ணுதே '' (111)

என்பன போன்ற சிறந்த செய்திகளைக் கொண்டுள்ளது.

இந்நூலுக்கும் பழைய உரை ஒன்றுள்ளது. அது யார் எழுதியது என்பது அறியக் கூடவில்லை.

**உண்மைநெறி விளக்கம் :**

ஆறு செய்யுள்களைக் கொண்ட நூல். இந்நூலில் ஞான நெறியை அடைவதற்குரிய பத்துச் செயல்முறைகளைக் குறித்துக் காணலாம். ''பத்துக்கொலாம் அடியார் செய்கைதானே '' (4-18-10) என்று அப்பரடிகள் அருளிச்செய்த பத்து வகைப் படிநிலைகள் வருமாறு ; தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம் ஆன்ம சுத்தி, சிவரூபம் சிவதரிசனம், சிவ யோகம், சிவபோகம் இவற்றின் இயல்புகளை இந்நூல் தெளிவு படுத்துகின்றது.

' உண்மைநெறி விளக்கம் ' என்னும் நூலை இயற்றியவர் சீர்காழித் தத்துவநாதர் என்று சில அறிஞர்கள் கூறுகிறார்கள்.



பதினான்கு சாத்திரங்களின் வைப்புமுறையைப் பார்த்தால், இந்நூல் உமாபதி சிவத்தினால் அருளப்பட்டது எனக் கூறுவதே பொருத்த முடையதாக இருக்கிறது. எனவே, இதில் குழப்பத்திற்கு இடமில்லை இந்நூலுக்குச் ' சிந்தனை உரை ' ஒன்று உள்ளது. அதனை எழுதியது யார் என்று புலனாகவில்லை.

**சங்கற்ப நிராகரணம் :**

இந்நூல் அகவல் பாவில் அமைந்து உள்ளது. இதில் இருபது பகுதிகள் உள்ளன. இந்நூலில் பெரும்பாலும் அகச்சமயவாதிகளின் கொள்கைகளையும் அவற்றிற்கு மறுப்புக்களையும் கூறுகின்றார் உமாபதிசிவம். இது சிவஞானசித்தியார் – பரபக்கத்தைப் போன்றது. இந்நூலைக் கற்பதன் வாயிலாகச் சித்தாந்த சைவத்தின் தெளிவான கொள்கையை அறியமுடிகிறது.

இந்நூலுக்கு ஞானப்பிரகாச தேசிகர் உரை ஒன்று உள்ளது; மற்றொன்று பழையஉரை. அதனை எழுதியவர் பெயர் தெரியவில்லை.

**மறைஞானசம்பந்தர் :**

அருணந்தி சிவாசாரியாரின் மாணவர் மறைஞானசம்பந்தர் ஆவார் இவர் திருப்பெண்ணாகடம் என்னும் திருத்தலத்தில், வைதீக சைவ அந்தணர் குலத்தில், பராசர கோத்திரத்தில் அவதரித்தார். ஏழாவது ஆண்டில் இவருக்கு உபநயனம் நிகழ்ந்தது. பின்பு, மரபுக்கு ஏற்ற வேதங்களையும் சிவாகமங்களையும் முறையாகப் பயின்று தெளிந்தார். பின்னர். அருணந்தி சிவாசாரியாரை அடைந்து, பந்தம் அறுத்து ஆட்கொள்ள வேண்டினார்.

அருணந்திசிவம் இவருக்குச் சிவ தீட்சை செய்து வைத்துச் சிவஞானத்தை உயர்த்தியருளினார். அதன் பிறகு, சிதம்பரத் திருத்தலத்தை அடைந்து தில்லை அம்பலவாணனை வழிபட்டுச் சீவன் முத்தராக வாழ்ந்து வந்தார். அந்நிலையில், இவரை வந்தடைந்த உமாபதி சிவாசாரியாருக்கு ஞான உபதேசம் செய்து, ஒரு ஆவணி மாதத்து உத்திர நட்சத்திரத்தில், சிதம்பரத்திற்கு மேற்குப் புறத்தில் உள்ள திருக்களாஞ்சேரியில் சுத்த அத்துவித முத்தி ஆகிய சிவசாயுச்சியத்தை எய்தி உள்ளார்.

**உமாபதி சிவம் :**

தில்லைக் கோயிலில் பூசை நடத்தும் அந்தணர் குலத்தில் திருவவதாரம் செய்தவர் உமாபதிசிவம். உரிய வயதில், உபநயனம் செய்விக்கப் பெற்றார். வேதாகமங்களையும் பல கலைகளையும் பயின்று தெளிந்தார். தில்லைக் கோயிலில் பூசையைச் செவ்வனே செய்து வந்தார்.

ஒரு நாள் பூசை முடித்து வழக்கம்போல், தீவட்டி முன் செல்ல, உமாபதிசிவம் சிவிகையில் ஏறிப் பரிவாரங்கள் புடை சூழத் திருவீதியில் வந்து கொண்டு இருந்தார். இக்காட்சியைக் கண்ட மறைஞான சம்பந்தர்.

"பட்ட கட்டையில் பகல் குருடு ஏகுதல் பாரீர்" என்று உமாபதி சிவனார் காதில் விழும்படி உரைத்தார். இதனைச் செவிமடுத்த உமாபதிசிவம் உடனே சிவிகையிலிருந்து இறங்கி மறைஞான சம்பந்தரை அணுகினார். அவர் சொன்ன சொற்களுக்குப் பொருள் கூறுமாறு வினவினார் உமாபதி சிவம். அதற்கு விளக்கம் கூறும் வகையில் மறைஞானசம்பந்தர் கீழ்க்காணுமாறு உரைத்தார்.

"பட்டகட்டை" என்பது பல்லக்கைக் குறிக்கும் ; 'பகல் குருடு' என்பது உச்சிவேளையில் தீவர்த்தியுடன் செல்வதைக் குறித்தது'

இவ்விளக்கத்தைக் கேட்ட உமாபதி சிவம், உடனே மறை ஞானசம்பந்தரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, ஞானவரம்பைத் தமக்கு உபதேசித்தருள வேண்டினார், மறைஞானசம்பந்தர் பின்னால் உமாபதிசிவம் நடந்து சென்றார்.

நெசவுத் தொழில் செய்யும் கைக்கோளர் தெருவுக்குச் சென்ற மறைஞானசம்பந்தர், நெசவு நூலின் பாவுக்கு இட்ட கூழின் மிச்சத்தைக் கைகளில் வாங்கி உண்டார். அவர் கைகளிலிருந்து கீழே ஒழுகிய கூழினை, அந்தணர் குலத்தில் உதித்த உமாபதிசிவம் தம் கைகளில் ஏந்தி உண்டார். இந்த எளிய இயல்பைக் கண்ட மறை ஞானசம்பந்தர், உமாபதிசிவனாருக்குப் பக்குவம் வாய்ந்திருப்பதை அறிந்து, அவருக்குச் சிவதீட்சை செய்து வைத்து, சிவஞானபோதம் என்னும் அருள்நூலின் நுண்பொருள்களைச் சிவஞான சித்தியாரின் விளக்கத்தோடு உணர்த்தியருளினார். உமாபதிசிவம் மறைஞான சம்பந்தரின் மாணவர் ஆயினார்.



இந்நிகழ்ச்சியை அறிந்த ஏனைய தில்லை அந்தணர்கள் உமாபதிசிவம் மரபுமுறை பிறழ்ந்து நடந்தார் என்று கூறி, அவரை சாதியிலிருந்து நீக்கிவைத்தனர்; தில்லைக்கோயில் பூசையைச் செய்வதற்கு அவருக்குத் தடை விதிக்கப்பட்டது.

உமாபதிசிவம், கொற்றவன்குடியில் ஒரு திருமடம் அமைத்து அதில் தங்கி அம்பலவாணர் வழிபாட்டைச் செய்து வந்தார். அந்நிலையில், ஒரு நாள் தில்லைக் கோயிலில் பூசை நடத்துவதற்கு உரிய அவரது முறை வந்தது; கோயிலுக்குள் உமாபதிசிவம் சென்றார்; அப்போது தில்லை அந்தணர்கள் அவரைத் தடுத்து நிறுத்திவிட்டனர். அதனைக் கண்டு மனந்தளராமல் கொற்றவன்குடியில் உள்ள தமது மடத்திற்குச் சென்று, அந்த பூசையை மானதமாகச் செய்து முடித்தார்.

உமாபதிசிவத்தைத் தடுத்த தில்லையந்தணர்கள், அடுத்த முறையில் பூசைக்குரியவரை. அம்பலவாணருக்குப் பூசை நடத்த நியமித்தனர். அவர் பூசை நிகழ்த்துவதற்காகப் பொன்னம்பலக் கதவைத் திறந்த போது, அங்குச் சிற்றம்பலமுடையவர் இருக்கும் பெட்டகம் காணப் பெறவில்லை. அச்சம் கொண்டு அந்தணர்கள் அம்பலவாணனிடம் முறையிட்டனர். அப்போது, 'பூசைக்குரிய முறையாளர் ஆகிய உமாபதி சிவத்திடம் நாம் அமர்ந்திருக்கின்றோம்' என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. உடனே அந்தணர்கள் கொற்றவன்குடிக்குச் சென்று உமாபதி சிவத்தின் திருவடிகளில் வீழ்ந்து, தங்கள் குற்றத்தைப் பொறுத் தருளுமாறு வேண்டினர். அதன் பேரில் உமாபதிசிவம் தில்லைக் கோயிலுக்குள் சென்று பூசை முறை முடிந்ததும், தம் திருமடத் திற்குத் திரும்பினார்.

முற்பிறப்பில் முனிவராயிருந்து சிவப்புண்ணியம் செய்த முதியவர் ஒருவர் இப்பிறப்பில் ஊழ்வினை காரணமாகப் புலையர் குலத்தில் பிறந்து, 'பெற்றான் சாம்பான்' என்னும் பெயருடன் தம் மனைவி யுடன் சிவத்தொண்டு செய்து வந்தார். அவர் செய்த சிவத்தொண்டு, நாள்தோறும் தில்லைக்கோயில் திருமடைப்பள்ளிக்கு விறகு வெட்டிக் கொண்டு வந்து சேர்ப்பதுவே ஆகும்.

பெற்றான் சாம்பான் பக்குவம் முதிர்ந்த நிலையினை எய்திய போது, அவரது கனவில் இறைவன் தோன்றி, "இதோ ஒரு சீட்டு உள்ளது. இதனை நம்பால் அன்புடைய கொற்றவன்குடி உமாபதி சிவத்திடம் கொடு ; அவர் உனக்கு முத்திப் பேற்றினை வழங்குவார்"

என்று கூறினான், கனவு நீங்கிப் பார்த்தபோது, பெற்றான் சாம்பான் கையில் ஒரு சீட்டு இருந்தது. அச்சீட்டு வருமாறு.

*" அடியார்க்கு எளியன், சிற்றப்பலவன் கொற்றங்*
*குடியார்க்கு எழுதிய கைச்சீட்டு - படியின்மிசை*
*பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து*
*முத்தி கொடுக்க முறை "*

உமாபதிசிவத்திடம் சென்று, வணங்கிப் பெற்றான்சாம்பான் அந்தச் சீட்டை அவர் திருமுன் வைத்தார். சிற்றம்பலவனின் சீட்டைக் கண்டு உமாபதிசிவம், பெற்றான் சாம்பானுக்குச் சிவதீக்கை செய்து, சுத்தாத்துவித முத்திப் பேற்றை அருளிச் செய்தார். பெற்றான்சாம்பான் சிவசாயுச்சியத்தை அடைந்தார்.

இவ்வுண்மையை அறியாத பெற்றான் சாம்பானின் மனைவி, சுற்றத்தாரையும் கூட்டிக்கொண்டு அரசனிடம் சென்று, ' உமாபதி சிவம் தன் கணவனைக் கொன்றுவிட்டார் ' என்று முறையிட்டாள்.

அரசன் வியப்படைந்து, உமாபதிசிவத்தை அணுகி ' உண்மை யாது? ' என வினவினான். உமாபதிசிவம் அரசனுக்குச் சிவதீட்சையின் சிறப்பை விளக்கிக் கூறினார், அஃது உண்மை யாயின், அதனைத் தனக்குப் புலப்படுத்துமாறு அரசன் கேட்டான்.

அங்கிருந்தவர்களில் எவருக்கும் முத்திப்பேறு வழங்குவதற்குரிய தகுதி இல்லாததால் அபிடேக நீர் பாய்ந்து அதனால் வளர்ந்திருந்த, அதற்குரிய தகுதியைப் பெற்றிருந்த முள்ளிச்செடியினை அரசனுக்குக் காட்டி. அதற்கு நயன தீட்சை செய்து, அதனை முத்தி பெறச் செய்தார், உமாபதிசிவம். அஃது ஒளியுரு பெற்று வானோக்கிச் சென்றதை அனைவரும் கண்ணுற்றனர். அரசனும் உமாபதிசிவத்தின் உயர்வை எண்ணி மகிழ்ந்தான்.

சில காலம் சென்றது. தில்லைத் திருக்கோயிலில் பெருவிழா தொடங்கியது; அந்தணர்கள் கொடியேற்றதற்கு முற்பட்டனர். கொடியேற்று விழாவிற்கு உமாபதி சிவத்தைத் தில்லை அந்தணர்கள் அழைக்கவில்லை; அவரை அவர்கள் புறக்கணித்தனர். கொடி ஏற்ற முயன்றபோது கொடி ஏறவில்லை

" உமாபதிசிவம் வந்தாலன்றிக் கொடி ஏருது " என்று அசரீரி எழுந்தது. மீண்டும் தில்லையந்தணர்கள் உமாபதிசிவத்தின் திருவடி களில் வீழ்ந்து வணங்கினர்; கொடியேற்றி வைக்குமாறு வேண்டினர்.



உமாபதிசிவம், "கொடிக்கவி" பாடினார்; கொடி ஏறியது; அதுவே சித்தாந்த நூல்களுள் ஒன்ருக உள்ளது.

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கனுள், எட்டு நூல்கள் அருளிச் செய்த உமாபதி சிவாசாரியர், மேலும் பல அரிய நூல்களைச் சைவசமயத்திற்குச் செய்தருளியுள்ளார். அவற்றின் விவரங்கள் வருமாறு;

1. சிவாகமங்களுள் ஞானபாதப் பொருளைச் சிறப்பாகப் பேசும் பௌஷ்கர ஆகமத்திற்கு உமாபதிசிவம் அரியதொரு பாஷ்யம் (பேருரை) செய்துள்ளார். சிவஞானசுவாமிகள் சிவஞானமாபாடியம் எழுது வதற்கு, இப்பேருரை பெரிதும் உதவியாயிருந்திருக்கிறது என்று டாக்டர் சபாரத்தினம் அவர்கள் கூறுகிறுர்கள்.

2. தில்லை அம்பலவாணனின் ஆடல் அழகைச் சிறப்பித்து 'நடராஜத்வனி மந்த்ரஸ்தவம்' என்னும் நூலையும் 'குஞ்சிதாங்கிரிஸ்தவம்' என்னும் நூலையும் அவர் செய்துள்ளார். இவை இரண்டும் வட மொழியில் உள்ளன.

3. தமிழ்மொழியிலும் பல நூல்களை அவர் செய்துள்ளார். அவை வருமாறு.

தில்லையின் வரலாறு, அம்பலவாணனின் அருளின் பெருமை முதலியவற்றை விளக்கும் ' கோயிற் புராணம் '

4. தேவாரம் அருளிச் செய்த மூவர் முதலிகள் சென்று வழிபட்ட திருத்தலங்களைத் தொகுத்துத் ' திருப்பதிக்கோவை ' என்னும் நூல்.

5. மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களைத் தொகுத்துத் ' திருப்பதிகக் கோவை ' என்னும் நூல்.

6. திருத்தொண்டர் புராணம் அருளிச் செய்த சேக்கிழார் பெருமானின் வரலாற்றைப் பேசும் ' சேக்கிழார் புராணம் '

7. தில்லைக்கோயிலிலிருந்து எடுக்கப்பட்டு, நம்பியாண்டார் நம்பிகளால் தொகுக்கப்பட்ட திருமுறைகளைப் பற்றிய வரலாற்றைக் கூறும் ' திருமுறைகண்ட புராணம் '. இந்நூலிலிருந்தே பதினோரு திருமுறைகளும் நம்பியாண்டார் நம்பிகள் தொகுத்தார் என்பதும், பின்னர் பன்னிரண்டாம் திருமுறை அவற்றுடன் சேர்க்கப்பட்டது

என்பதும் அறிய முடிகிறது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராக இருந்த க. வெள்ளைவாரணனார் அவர்கள் 'பன்னிரு திருமுறை வரலாறு' என்னும் நூலைச் செய்வதற்கு, உமாபதிசிவம் செய்தருளிய 'திருமுறைகண்ட புராணம்' பெரிதும் உதவியிருக்கிறது. இன்னும், பன்னிரு திருமுறைகள் எவை எவை என்பதும், அவற்றின் வைப்பு முறை யாது என்பதும் முதன்முதலில் சைவ உலகத்திற்கு அறிவுறுத்தியது, உமாபதிசிவம் செய்தருளிய 'திருமுறைகண்ட புராணம்' என்னும் அரிய நூலேயாகும்.

8. சிவனடியார்களைச் சிவன் எனவே கொண்டு வழிபட வேண்டும் என்னும் சிவஞானபோதம் பன்னிரண்டாம் சூத்திரக் கருத்துக்கு விளக்கம் தரும் வகையில், 'திருத்தொண்டர் புராணசாரம்' என்று ஒரு நூலை உமாபதிசிவம் செய்துள்ளார். பெரிய புராணத்தில் வரும் அறுபத்து மூன்று நாயன்மார்கள், ஒன்பது தொகை அடியார்கள் ஆகியவர்களின் வாழ்க்கைச் சிறப்பை இந்நூலில் அவர் எடுத்தியம்பியுள்ளார்.

9. 'திருவருட்பயன்' என்னும் சாத்திரநூலில் உள்ள பத்துத் தலைப்புக்களில் 'தேவார அருள்முறைத்திரட்டு' என்னும் நூல் ஒன்றினை உமாபதிசிவம் அருளிச் செய்துள்ளார். இந்நூல் திருமுறை களில் உள்ள சைவசித்தாந்த நுட்பங்களை நமக்கு உணர்த்தும் வகையில் அமைந்துள்ளது. இந்நூலுக்குத் திருநெல்வேலி மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள் அரியதோர் உரை விளக்கம் எழுதியுள்ளார்கள். அவ்வுரை இப்போது கிடைப்பது அரிதாக இருக்கிறது. மீண்டும் அஃது அச்சு ஏறினால், சைவ உலகத்திற்குப் பெரிதும் பயன்படும்.

10. அடுத்து உமாபதிசிவம் அருளிச் செய்துள்ள ஒரு நூல், "ஞான ஆசார சாத்திர பஞ்சகம்" என்பது. இந்நூலில் சைவ சமயத்தைச் சார்ந்துள்ளவர்கள் அனுட்டிக்க வேண்டிய பூஜாவிதி, தீட்சாவிதி, தியானவிதி முதலியன தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. இந்நூலும் அச்சேறினால் சைவ உலகத்திற்குப் பேருதவியாக இருக்கும்.

இவ்வாறு சைவஉலகத்திற்குப் பெரிதும் பயன்படும் வகையில் பல நூல்களைச் செய்தருளிய உமாபதிசிவாசாரியாருக்குச் சைவ உலகம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளது. இவரைப் போன்று சைவ உலகத்திற்கு உதவியவர் எவரும் இல்லை என்று சொன்னால் அது மிகையாகாது.



இத்துணைச் சிறப்புக்களை உடைய உமாபதிசிவாசாரியார், ஒரு சித்திரை மாதத்து அத்தம் நட்சத்திரத்தில் சுத்தாத்துவித முத்தியாகிய சிவசாயுச்சியத்தைப் பெற்றுள்ளார்.

சந்தான குரவர்கள் காலத்தை நிறுவுவதற்குச் 'சங்கற்ப நிராகரணம்' என்னும் சாத்திர நூலில்,

" ஏழஞ் சிருநூ றெடுத்த ஆயிரம் வாழுநற் சகனம்
மருவா நிற்ப ... ... ... நவிற்றுவனே "

என்று உமாபதிசிவம் அருளிச்செய்த கருத்துப் பெரிதும் உதவியாக இருந்தது. எனவே, உமாபதி சிவாசாரியார் ஒரு வரலாற்றுப் பேராசிரியராகவும் இருந்திருக்கிறார் என்பதும் பெறப்படுகிறது.

சித்தாந்த சைவம் இன்றும், பல எதிர்ப்புகளுக்கு இடையில், வளர்ந்து வருகிறது என்றால், உமாபதி சிவாசாரியாரின் அருந் தொண்டே அதற்குக் காரணம் என்பது மறுக்க முடியாததோர் உண்மையாகும்.

**திருக்கயிலாய பரம்பரை :**

திருக்கயிலாயத்தில் சிவஞானச் செங்கோல் ஓச்சிக் கொண்டிருக்கும் ஸ்ரீகண்ட பரமசிவத்திடம் அணுக்கத் தொண்டராய் இருப்பவர் திருநந்திதேவர். அவர் வேதங்களையும் சிவாகமங்களையும் கல்லாலின்கீழ் தட்சிணாமூர்த்தி வடிவாயிருந்த பரமசிவத்திடமிருந்து தெரிந்து கொண்டார். நந்திதேவர் சிவாகமங்களின் உண்மையை சனற்குமாரமுனிவருக்கு உபதேசித்தார்; அவர் அவற்றைச் சத்திய ஞான தரிசினிகளுக்கும், அவர், சம்மாணவர் பரஞ்சோதி முனிவ ருக்கும் உபதேசித்தனர்.

திருநந்திதேவர், சனற்குமாரர், சத்தியஞானதரிசினி, பரஞ்சோதி முனிவர் ஆகிய நால்வரும் தேவபரம்பரையைச் சேர்ந்தவர்கள்.

பரஞ்சோதி முனிவர் மெய்கண்டாருக்குச் சிவாகம நுண் பொருளை உபதேசித்தார். ஆக, மெய்கண்டார், அருணந்திசிவம், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம் ஆகிய நால்வரும் பூதபரம் பரையைச் சேர்ந்தவர்கள்.

தேவபரம்பரையைச் சேர்ந்தவர்கள் அகச்சந்தான குரவர் எனப் படுவர்; பூதபரம்பரையைச் சேர்ந்தவர்கள் புறச்சந்தானகுரவர் எனப் படுகிறார்கள்.

உமாபதிசிவத்தின் மாணவர் அருள் நமச்சிவாயர் ; அவருடைய மாணவர் சித்தர் சிவப்பிரகாசர். அவரது மாணவர்ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள். திருவாவடுதுறை ஆதீனத்தை நிறுவியவர்ஸ்ரீநமச்சிவாய மூர்த்திகளே ஆவர். பெற்றோர் இவர்களுக்கு 'வைத்தியநாதன்' என்னும் திருநாமம் சூட்டி மகிழ்ந்தார்கள்.

ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் நிறுவிய திருவாவடுதுறை ஆதீனத்தில் இன்று இருபத்து மூன்றாவது குரு மகாசந்நிதானமாக சீர் வளர் சீர் சிவப்பிரகாசப்பண்டாரச் சந்நிதி அவர்கள் அருளாட்சி புரிந்து வருகிறார்கள். ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகளைத் தொடர்ந்து ஞானபீடத்தில் எழுந்தருளும் குருமூர்த்திகள் அபிடேக பரம்பரையினர் எனப் போற்றப் படுகிறார்கள். இவ்வாறு நம்முடைய திருவாவடுதுறை ஆதீனம், திருக்கயிலாயத்திலிருந்து தொடங்கிப் பரம்பரையாக இன்றுவரை சிவஞானச் செங்கோலாட்சி புரிந்து வருவதால், இது திருக்கயிலாய பரம்பரை' எனப் போற்றப்படுகின்றது.

திருநந்தி (சயிலாதி) தேவரைக் குருவாகக் கொண்டு, அவர் மரபுவழி வந்ததால், இது சயிலாதி மரபுடையது எனப் போற்றப் படுகிறது.

மறைஞானசம்பந்தரின் மற்றொரு மாணவராகிய மச்சுச் செட்டியார் வழியில் வந்த எட்டாவது மாணவர் குருஞானசம்பந்தர் ஆவர். அவர் நிறுவிய திருமடம் தருமபுர ஆதீனமாகும். எனவே அதுவும் திருக்கயிலாய பரம்பரையைச் சேர்ந்தது எனப் போற்றப் படுகிறது.

உமாபதி சிவாசாரியாரின் காலம் கி. பி. 1313 என்பது வரலாற்றுப் பேராசிரியர்களின் ஒருமித்த கருத்து.

திருவாவடுதுறை ஆதீனம் தோற்றுவிக்கப்பட்ட காலம் கி. பி. 1360 என்னும் உண்மை, திருவாவடுதுறை ஆதீன வெளியீடு எண் 354 / 1986 - பக்கம் 89-ல் காணப்படுகிறது. உமாபதி சிவாசாரியாரின் காலத்தை அடுத்து, 47-ஆவது ஆண்டில் இற்றைக்குத் 632 ஆண்டுகளுக்கு முன்பு திருவாவடுதுறை ஆதீனம் தோன்றியுள்ளது என்பது தெளிவாகிறது.

தருமபுரம் ஆதீனம் தோற்றுவிக்கப்பட்ட காலம் கி. பி. 1560 என்னும் உண்மை தருமை ஆதீன வெளியீடு எண் 635 / 1972 பக்கம் 88ல காணப்படுகிறது இற்றைக்கு 432 ஆண்டுகளுக்கு முன்பு தருமையாதீனம் தோன்றியுள்ளது என்பது தெளிவாகிறது.

இவ்விரு ஆதீனங்களை அடுத்துப் பல ஆதீனங்கள் தோன்றியுள்ளன.



## திருவாவடுதுறை ஆதீனம்

"துறைசை ஆதீனம்" என்று சைவ மக்களால் போற்றப் படும் திருவாவடுதுறை ஆதீனத்தில் எழுந்தருளி அருளாட்சி புரிந்த அருட்பெருவேந்தர்களின் காலம் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1) | அருள்திரு | நமசிவாய மூர்த்திகள் | |
| 2) | ,, | மறைஞான தேசிகர் | |
| 3) | ,, | அம்பலவாண தேசிகர் | |
| 4) | ,, | உருத்திரகோடி தேசிகர் | ... கி. பி. 1360 முதல் 1621 வரை |
| 5) | ,, | வேலப்ப தேசிகர் | |
| 6) | ,, | குமாரசாமி தேசிகர் | |
| 7) | ,, | (பின்) குமாரசாமி தேசிகர் | ... கி. பி. 1621 முதல் 1625 வரை |
| 8) | ,, | மாசிலாமணி தேசிகர் | ... கி. பி. 1625 – 1658 |
| 9) | ,, | இராமலிங்க தேசிகர் | ... கி. பி. 1658 – 1678 |
| 10) | ,, | வேலப்ப தேசிகர் | ... கி. பி. 1678 – 1700 |
| 11) | ,, | (பின்) வேலப்ப தேசிகர் | ... கி. பி. 1700 – 1730 |
| 12) | ,, | திருச்சிற்றம்பல தேசிகர் | ... கி. பி. 1730 – 1770 |
| 13) | ,, | அம்பலவாண தேசிகர் | ... கி. பி. 1770 – 1789 |
| 14) | ,, | (வேளூர்) சுப்பிரமணிய தேசிகர் | ... கி. பி. 1789 – 1845 |
| 15) | ,, | அம்பலவாண தேசிகர் | ... கி. பி. 1845 – 1869 |
| 16) | ,, | (மேலகரம்) சுப்பிரமணிய தேசிகர் ... | ... கி. பி. 1869 – 1888 |
| 17) | ,, | அம்பலவாண தேசிகர் | ... கி. பி. 1888 – 1920 |

18) ,, சுப்பிரமணிய தேசிகர் ... கி. பி. 1920 - 1922

19) ,, வைத்தியலிங்க தேசிகர் ... கி. பி. 1922 - 1937

20) ,, அம்பலவாண தேசிகர் ... கி. பி. 1937 - 1951

21) ,, சுப்பிரமணிய தேசிகர் ... 18-4-1951 முதல் 23-9-1967 வரை

22) ,, அம்பலவாண தேசிகர் ... 23-9-1967 முதல் 7-4-1983 வரை

23). சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள் 7 — 4 — 1983 முதல் அருளாட்சி புரிந்து வருகிறார்கள்.

**சைவ சமயப் பணிகள் :**

மூன்றாவது பட்டத்தில் அருளாட்சி புரிந்த சீர்வளர் சீர் அம்பலவாண தேசிகர் அவர்கள்.

தசகாரியம், சன்மார்க்க சித்தியார், சிவாச்சிரமத்தெளிவு, சித்தாந்த பஃறொடை, சித்தாந்தசிகாமணி, உபாய நிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசயமாலை, நமச்சிவாய மாலை, என்னும் பத்து ஞான நூல்களை அருளிச் செய்துள்ளார்கள்.

நான்காவது பட்டத்து அருட்பெரு வேந்தர் சீர் வளர்சீர் உருத்திரகோடி தேசிகர் அவர்கள் காலத்தில்தான் நாடெங்கும் ஆதீனக் கிளை மடங்கள் தோன்றின. பல கிராமங்கள் ஆதீனத்திற்குச் சொந்தமாயின.

ஐந்தாவது பட்டத்தில் அமர்ந்திருந்த சீர்வளர்சீர் வேலப்ப தேசிகர் அவர்கள் நமச்சிவாயத் தம்பிரான் அவர்கள் எழுதி வைத்திருந்த ‘ திருவருட்பயன் ’ ‘ வினா வெண்பா ’ ஆகிய இரு சாத்திர நூல்களுக்குள்ள உரையினை வெளியிட்டார்கள்.

பதினொன்றாவது பட்டத்து அருட்பேரரசர், சீர்வளர்சீர் பின் வேலப்ப தேசிகர் அவர்கள் 655 செய்யுள்களைக் கொண்ட திருப்பறியலூர்ப் புராணத்தை இயற்றியருளினார்கள்.



இவர்கள் காலத்தில்தான், நம் அரும் பெறல் பெருந்தகை, மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த “ சிவஞான மாபாடியம் ” என்னும் சிவஞானபோதப் பேருரை அரங்கேற்றப்பட்டது.

இப்பேருரையின் வாயிலாக, வடமொழியில் பாடியம் செய்த ஆதிசங்கரர், இராமாநுசர் போன்ற மதாசாரியார்கள் வரிசையில் வைத்து எண்ணப்படவேண்டிய அளவுக்கு, மாதவச்சிவஞான சுவாமிகள் போற்றப்படுகிறார்கள். தமிழ் மொழியில் முதன் முதல் பாடியம் செய்தருளியமையால், தமிழ்கூறும் நல்லுலகம் இவர்களைப் “ பாடியக்காரர் ” என்று போற்றிப் புளகிதம் உறுகிறது.

சிவஞானமாபாடியம் அரங்கேற்றப்படும் காலத்தில் இளவரசாக வீற்றிருந்த சீர் வளர் சீர் திருச்சிற்றம்பல தேசிகர் அவர்கள், பின்பு பன்னிரண்டாவது பட்டத்துப் பேரருள் அரசராகப் பதவி ஏற்றார்கள்.

பதினைந்தாவது பட்டத்தில் அருளாட்சி புரிந்த சீர் வளர் சீர் அம்பலவாண தேசிகர் அவர்கள் ஞானபீடத்தில் அமர்ந்திருந்த காலத்தில்தான், கி. பி. 1860-ல் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் ஆதீன வித்துவானாக அமர்த்தப்பட்டார்கள். “ பிள்ளை அவர்கள் ” என்று அவர்கள் மாணவர் உ. வே. சாமிநாதய்யர் அவர்களால் போற்றப்படும் அவர்கள் இயற்றிய அம்பலவாண தேசிகர் கலம்பகத்தைப் பாராட்டிப் பிள்ளை அவர்களுக்கு ‘ மகாவித்துவான் ” என்னும் பட்டத்தை இவர்கள் சூட்டி மகிழ்ந்தார்கள்.

பதினாறாவது பட்டத்தில் வீற்றிருந்த சீர்வளர்சீர் சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் காலத்தில், கி. பி. 1888ல் தமது ஆதீனத்து ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளைக் குன்றக்குடியில் உள்ள திருவண்ணாமலை ஆதீனத் தலைவராக இவர்கள் அனுப்பி வைத்தார்கள். தமது ஆதீனத்திலிருந்து ஸ்ரீ முத்துக் குமாரசாமித் தம்பிரான் சுவாமிகளைச் சூரியனார் கோயில் பண்டாரச் சந்நிதிகளாக இவர்கள் அதே ஆண்டில் நியமித்தார்கள்.

மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிச் செய்த சிவஞான சித்தியார் பொழிப்புரையைத் தழுவிப் பதவுரை ஒன்றை இவர்கள் அருளிச் செய்தார்கள். யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களுக்கு “ நாவலர் ” என்னும் பட்டத்தைச் சூட்டியருளினார்கள் இவர்கள் காலத்தில்தான், கி. பி. 1877-ல் ஆதீனத்துக் கொலு மண்டபம் அமைக்கப்பட்டு ‘ வேணுவனலிங்க விலாசம் ’ என அது வழங்கப்படலாயிற்று.

பதினேழாவது பட்டத்தில் அமர்ந்திருந்த சீர்வளர்சீர் அம்பலவாண தேசிகர் அவர்கள், ஏட்டுச்சுவடியிலிருந்த சிவஞான மாபாடியத்தைக் காகிதப் பிரதி செய்தருளினார்கள். இன்று ஆதீனத்தில் உள்ள ‘சரஸ்வதி மகால்’ இவர்கள் காலத்தில் தான் தோற்றுவிக்கப் பட்டது. இவர்கள், திருவைந்தெழுத்து மந்திரத்தை ஒருகோடித் தடவைகள் எழுதித் தொகுத்து, அச்சிடுவித்துக் கட்டடமாக்கி வைத்துள்ளார்கள். இஃது ஓர் அரிய பெரிய அருளிப்பாடு ஆகும்.

இருபத்து ஒன்றாவது பட்டத்தில் செங்கோல் ஓச்சிய சீர்வளர்சீர் சுப்பிரமணிய தேசிகர் அவர்கள் காலத்தில் திருமடத்தின் நிதி நிலைமை பெருகியது. சம்பிரதாயப்படி பல்லக்கில் செல்லும் மரபு நிறுத்தப்பட்டது. காரில் செல்லும் மரபு மேற்கொள்ளப்பட்டது. திருமந்திரத் திருமுறையும் சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கும் உரைகளுடன் ஆதீனத்திலிருந்து வெளியிடப் பெற்று அன்பர்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டன. பல திருமந்திரக் கருத்தரங்குகளும் சைவ சமய மாநாடுகளும் நடத்தப்பெற்றன. ஆதீனக் குருமுதல்வர் பெயரால் “ஸ்ரீ நமசிவாய மூர்த்தி அச்சகம்” என்னும் பதிப்பகம் ஒன்று நிறுவப்பட்டது. தேசிகர் அய்யா என்று அன்புடன் அழைக்கப்படும் ச. தண்டபாணி தேசிகர் அவர்களுக்கு “மகாவித்துவான்” என்னும் பட்டத்தை இவர்கள் வழங்கியருளினார்கள்.

இருபத்திரண்டாவது பட்டத்து அருளரசர், சீர் வளர் சீர் அம்பலவாண தேசிக மூர்த்திகள் காலத்தில், திருவிடைமருதூரில் திருமுறைக்கருத்தரங்கம், திருவாசக மாநாடு முதலியன வெகு விமரிசையாக நடைபெற்றன, இந்தியப் பெருநாட்டின் பிரதமராக இருந்த திரு. மொரார்ஜி தேசாய் அவர்களும் தமிழக முதல்வராயிருந்த எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களும் திருவிடை மருதூருக்கு வருகை தந்து இவ்வருளரசரைத் தரிசித்து அருளாசி பெற்றுச் சென்றார்கள்.

இவர்கள் காலத்தில்தான், திருவிடைமருதூரில் உள்ள திருவாவடுதுறை ஆதீனப் பள்ளிகளுக்குக் கட்டடங்கள் கட்டப்பட்டன.

இந்த ஆதீன நிருவாகத்தில் உள்ள பள்ளிகள் அனைத்தும் சிறுபான்மையோர்க்குரிய பள்ளிகள் (Minority Schools) பெறுகின்ற சலுகைகளைப் பெறுவதற்கு வேண்டுவனவற்றைச் செய்தருளினார்கள்.

திருவிடைமருதூர், ஸ்ரீ மகாலிங்கப் பெருமான் திருக்கோயில் திருப்பணிகள் செய்விக்கப்பெற்று, 15-7-1970-ல் திருக்குடமுழுக்கும் சிறப்பாக நடத்துவித்தார்கள், திருவாவடுதுறை ஸ்ரீ மாசிலாமணிப்



பெருமான் திருக்கோயில் திருப்பணிகளும் செய்விக்கப் பெற்று, 27-8-1972-ல் திருக்குடமுழுக்கு விழாவினை நிகழச் செய்தார்கள்.

மாதவச்சிவஞான சுவாமிகள் திருஅவதாரம் செய்தருளிய விக்கிரமசிங்கபுரம் என்னும் திருத்தலத்தில் அவதரித்தருளிய ஸ்ரீ சிவசுப்பிரமணியம் அவர்களுக்கு 6-8-1980-ல் சீர் வளர் சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதிகள் என்னும் தீட்சா நாமம் சூட்டியருளி, இளவரசுப் பட்டத்தில் இவர்கள் அமரச்செய்தருளினார்கள்.

ஆதீனக் குருமுதல்வர் ஸ்ரீ நமசிவாய மூர்த்திகளின் அருட்குருவாகிய சித்தர் சிவப்பிரகாச சுவாமிகளின் திருப்பெயர், இதுவரை திருவாவடுதுறை ஆதீனத்தில் அருளாட்சி புரிந்த எந்த அருளரசருக்கும் கிடைக்கப் பெறாத ஒன்று ஆகும்.

இஃது இறைவன் திருக்குறிப்பே ஆகும்.

இருபத்து மூன்றாவது பட்டத்து அருட்பேரரசராக இருந்து, சிவஞானச் செங்கோல் ஓச்சிவரும், சீர்வளர்சீர் சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி அவர்கள்.

*‘நிலையின் திரியாது அடங்கியான் தோற்றம்*
*மலையினும் மாணப் பெரிது”* (124)

என்னும் குறள் மொழிக்கு ஏற்பக் ‘காட்சிக்கு எளியராய்க் கடுஞ்சொல்லர் அல்லராய், அமைதியே வடிவாக அமர்ந்தருளி அருளாட்சி நடாத்தி வருகிறார்கள்.

இவர்கள் ஆற்றிவரும் திருப்பணிகள் எண்ணில் அடங்காதன. இவர்கள் ஆட்சிப் பொறுப்பேற்ற காலத்திலிருந்து இதுவரை முப்பத்து ஒன்று திருக்கோயில்களுக்குக் குடமுழுக்கு செய்தருளியுள்ளார்கள். எழுபதுக்கு மேல் உள்ள சைவ சமய நூல்களை மலரச் செய்துள்ளார்கள். எண்ணிறந்த சமுதாயப் பணிகளை அருளிச் செய்து கொண்டிருக்கிறார்கள். திருமடத்திற்கு வருகை தந்து, தம்மைத் தரிசிக்கும் அன்பர்கள் அனைவருக்கும் அருட்கொடை வழங்குவதோடு ‘அன்னதானப் பிரபு’ வாக அமர்ந்தருளி, உணவு உண்பிக்காமல் அவர்களை அனுப்புவதில்லை என்ற விரதம் மேற்கொண்டுள்ளார்கள்.

மாதந்தோறும் ‘மகம்’ நட்சத்திரத்தில், தலைமைத் திருமடத்திலும் திருக்கோயில்களிலும் கிளை மடங்களிலும், ‘திருவாசகம் முற்றோதல்’ பணியினை நடத்தி வரும்படி செய்தருளியுள்ளார்கள்.

உழவாரப் பணி செய்து வரும் அன்பர்களை ஊக்குவித்து அவர்களுக்கு உணவும் உடையும் கொடுத்தருளி வருகின்றார்கள்.

இந்துமத வளர்ச்சிக்காக இவர்கள் செய்தருளிவரும் அறங்கள் அளவிலடங்கா. நாகர்கோவிலில் உள்ள திருமடத்திற்குச் சொந்தமான கட்டிடத்தினை 'விஸ்வ ஹிந்து பரிஷத்' என்ற இயக்கத்திற்குக் குறைந்த வாடகைக்கு வழங்கியுள்ளார்கள். கல்லாடை புனைந்த துறவிகள் அனைவரையும் அரவணைக்கும் அருளுள்ளம் உடையவர்கள்.

சைவ சித்தாந்தக் கட்டுரைகளைக் கொண்ட 'மெய்கண்டார்' என்னும் திங்கள் இதழைத் தாம் இளவரசாக இருந்த காலத்திலேயே தோற்றுவித்தருளியதோடு இந்நாள்வரை அதனைச் செய்மையுற நடத்திவரச் செய்தருளியுள்ளார்கள்.

எல்லோரும் சைவ சித்தாந்தம் கற்க வேண்டும் என்னும் பெருநோக்கோடு பேருள்ளம் கொண்டு "திருவாவடுதுறை ஆதீன சைவ சித்தாந்த நேர்முகப் பயிற்சி மையம்" ஒன்றினைத் திருவிடைமருதூரில் நிறுவச் செய்தருளியுள்ளார்கள். இம் மையத்தில் மாநிலமெங்கும் ஆயிரம் மாணவர்கள் வரை சேர்ந்து பயின்று வருகிறார்கள். எவரும் இதுவரை செய்திராத அளவு பல்கலைக்கழகப் பேராசிரியர்களைக் கொண்டு பதினொன்கு சாத்திரங்களுக்கும் இப்பயிற்சி மையத்தில் தமிழ் நாட்டில் உள்ள இருபத்தைந்து பயிற்சி மையங்களில் நேர்முக வகுப்புகள் நடைபெறும்படி அருளிச் செய்துள்ளார்கள்.

**இறுவாய் :**

திருவாவடுதுறை ஆதீனம் போன்று இன்னும் பல சைவ மடங்களும் சென்னை சைவசித்தாந்தப் பெருமன்றமும் சைவ சமய வளர்ச்சிக்காகப் பெரும் பணிகளைச் செய்து வருகின்றன.

எத்தனையோ இடையூறுகளுக்கும் இடையில், எண்ணற்ற நூற்றாண்டுகளாகச் சைவ சமயம், எதிர் நீச்சல் போட்டுக் கொண்டிருக்கிறது. தொன்மை மிக்க நமது சைவ சமயத்தைக் கட்டிக் காக்க வேண்டுவது நமது கடமையாகும். சைவ இளைஞர்கள் இதனைத் தெளிவாகப் புரிந்து வைத்திருக்கிறார்கள் என்பதில் எள்ளத்துணை ஐயத்திற்கும் இடமில்லை.

"மேன்மை கொள் சைவநீதி
விளங்குக உலகமெல்லாம்"

